Smt. Prahaash

கடவுள் துணை

புகழேந்திப் புலவர் இயற்றிய

பெரிய எழுத்து

# புலந்திரன்களவு மாலை



B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள் விலாச அச்சகம்,

சென்னை-1.

இதன் விலை] —— [ரூ. 1-00

உ

கடவுள் துணை

# புலந்திரன் களவுமாலை



அத்திமுகத்தோனே அரனார்திருமகனே
சத்திக்கணபதியே சங்கரனார்திருமகனே
பானைவயிற்றோனே பழமேந்துங்கையோனே
ஆனைமுகத்தோனே ஐங்கரனேமுன்னடவாய்
வேலவர்க்குமுன்பிறந்த வித்தைகளஞ்சியமே
மூலமுதலே முன்னடக்கவேண்டுமையா.

## சரஸ்வதி துதி

நாவிற்சரஸ்வதியே நான்முகனார்தேவியரே
சதுர்முகனார்தேவியரே தாயேசரஸ்வதியே
வாக்குவரமருள்வாய் மறையவனார்தேவியரே
நாவுதவறாமல் நற்கருத்தைதாருமம்மா
இந்தக்கதைதனக்கு இனிகருத்தைத்தாருமம்மா
பூவிலமர்ந்ததொரு பொற்கொடியேநான்சரணம்
சரணமென்றடிபணிந்தேன் தற்காக்கவேண்டுமம்மா
தப்புகளுண்டாயின் தாயேயருள்புரிவாய்
குற்றமிருந்தாலுங் கொண்டணைக்கவேண்டுமம்மா
புலந்திரனார்கதையுரைக்க புத்திமிகவருளும்

## பாண்டியன் பெருமை

பட்டணமாம்பட்டணமாம் மதுராபுரிபட்டணமாம்
பட்டணத்தையாளுகிற பாண்டியராஜாக்கள்
மதுரைப்பதிதனிலே மன்னவர்கள்ராஜாக்கள்
நீதிமனுமுறைகள் நெறிதவராப்பாண்டியர்கள்
ஆறிலொருகடமை அரசர்கள்வாங்குவது
சொக்கர்வலுமையுண்டு துரைராஜர்பாண்டியற்கு
மீனாட்சிவலுமையினால் மேன்மையுடனாண்டிருந்தார்
சக்கரநெறிப்படியே தரணிதனையாண்டிருந்தார்

## அல்லியரசாணி உற்பத்தி

இப்படியாகவே யிருக்கின்றநாளையிலே
ஆறுயிரவர்களும் அணிதிரளாம்பாண்டியர்கள்
பிள்ளையைவேண்டியே பெருந்தபசுதானிருந்தார்
மைந்தனைவேண்டியே மகாதவசுதானிருந்தார்
சோலைமலருடைய சொக்கரைநோக்கியேதான்
கால்கள்நடுங்கத்தான் கடுந்தவசுதானிருந்தார்
சங்கருமப்போது தயவாய்மனமிரங்கி
அங்கையற்கண்மீனாட்சி அவளுமிரங்கியேதான்
சந்திரர்கள்சூரியர்கள் சந்திபண்ணும்பொய்கையிலே
செவ்வலரிப்பூவிலே செல்வம்பிறந்ததுகாண்
அல்லிமலரிலே அவதரித்தாள்பெண்பெருமாள்
குழந்தையைப்பார்க்கவே கொற்றவர்கள்ராஜாக்கள்
கண்டுமனமகிழ்ந்தார் காவலர்கள்ராஜாக்கள்
பார்த்துமகிழ்ந்திருந்தார் பாண்டியராஜாக்கள்
கண்டெடுத்துக்கொண்டுவந்தார் காவலர்கள்ராஜாக்கள்
வைத்துவளர்த்தெடுத்து வரிசையுள்ளபெண்கொடிக்கு
அல்லியரசாணியென்று அரசியற்குப்பேருமிட்டு
நாளொருவண்ணமும் பொழுதொருமேனியுமாய்
வைத்துவளர்த்தார்கள் வண்டார்கருங்குழலை

## அல்லியரசாணி பராக்கிரமம்

ஏழுவயதாச்சு இளங்கொடியாள்நாயகிக்கு
பாதிஅரசு பகுந்தாண்ட நீன்முகனை
முடுகிவந்த நீன்முகனை முந்திமயிர்பிடித்து
குடலைப்பிடுங்கியேதான் கொம்பனையும்மாலையிட்டு [ள்
பெண்ணரசுபட்டங்கட்டி பெருக்கமுடன்வாழ்ந்திருந்தா
ஆண்காற்றடித்தாலே அதம்பண்ணிப்போட்டிடுவாள்
கண்டவரைக்குத்தியே கழுவிலேஏற்றிடுவாள்
எண்ணவொண்ணாச்சேனையுடன் எடுத்தாளேமந்திரவா
மந்திரவாளெடுத்து மதயானைபோலெழுந்து [ள்
எதிர்க்கத்தான்கண்டவரை யெண்ணியேபாராமல்
கண்டமுனிராட்சதரைக் கண்டதுண்டமாக்கிடுவாள்
வடமதுரை நாடு வடதேசபட்டணமும்
ஈழக்கலிங்கதேசம் இடமுள்ளபட்டணமும்

முத்துகப்பலாயிரமாம் மிளகுகப்பலாயிரமாம்
பாக்குபடுந்துறையும் பாண்டிவளநாடும்
இத்தனைநாடுகளும் இடமுள்ளராச்சியமும்
பட்டமுங்கட்டியிவள் பாருலகையாண்டிருந்தாள்
பத்துவயதாச்சு பைங்கொடியாளல்லியற்கு
வளர்ந்துசமைந்தாள்காண் மாதுருதுவானுள்

## ஸ்ரீ கிருஷ்ணர் அல்லியை அர்ச்சுனற்கு பாரியாக நினைத்தது

ஏழுலகையாண்டதொரு எம்பெருமாள்தான்பார்த்து
அல்லிமலரி லவதரித்தபெண்பெருமாள்
அழகில்மிகுந்ததொரு அல்லியரசாணியரை
தக்கபுகழுடைய தருமராதுதம்பியரை
காண்டாவனமெரித்த காளையந்தவருச்சுனர்க்கும்
ஆணுலழகருக்கும் அல்லியரசானியர்க்கும்
இவர்களழகுக்கும் ஏற்குங்காண்வையகத்தில்
என்றுசொல்லிமாயவனுர் இபலாகத்தானினைந்து
சோலைமலருடைய சொக்கருமாயவரும்
அருளால்மிகுந்ததொரு அங்கயற்கண்ணுயகியும்
தேவாதிதேவருடன் தென்மதுரைவந்துநின்று
அடங்கலுந்தானழைத்து ஆருயிரவருஷமாய்
பெண்கேட்கவந்தோங்காண் பேருலகில்ராஜாவே
பெண்ணுய்ப்பிறந்தாலும் பிழையில்லாப்பெண்பெருமாள்
நீன்முகனைக்கொன்று நீலிபட்டமாண்டவள்காண்
கூடியவர்தானினைந்து கொம்பனையைச்சொல்லுகைக்கு
மதுரைப்பதியாளும் மன்னவர்கள்பாண்டியரே
மணக்கோலம்வந்தோங்காண் பேருலகில்ராஜாவே
என்றுயிவருரைக்க இராஜமன்னரேதுசொல்வார்
ஆருயிரவர்களும் ஐயன்மாரேதுசொல்வார்
மந்திரவாளோடே மயிலணையாள்தான்பிறந்தாள்
கண்டவரைக்கொன்று கழுவிலேயேற்றிவைப்பாள்
அண்டமாம்பெருநீலி ஆர்சொல்லுங்கேளாளே
அவளுக்குஏற்றவர்தா னருச்சுனரேயாகுமென்றுர்
ஆண்காற்றடித்தால் அதம்பண்ணிப்போட்டிடுவாள்
உங்களாலானபடி உத்வமரேபாருமென்றுர்

## அருச்சுனன் பாம்பாகவும் பெருமாள் பிடாரனாகவும் வருதல்

ஏழுலகையாண்ட யெம்பெருமாள்தான்கேட்டு
என்னாலேயாகுமென்று எழுந்திருந்தாரெம்பெருமாள்
காண்டாவனமெரித்த காளையென்னுமர்ச்சுனரை
ஐந்துதலைநாகம்போல் அடைவாய்வடிவாக்கி
மண்ணுளிப்பாம்பு வகையானசர்ப்பமுடன்
புண்ணியமூர்த்தி பிடாரனைப்போல்வேடங்கொண்டு
வேஷவுருவெடுத்து வேறேயுருமாறி
அரசாளும்நாயகியாள் அல்லியுடபட்டணத்தில்
தண்ணீர்குளத்தருகே தார்வேந்தர்வந்து நின்று
பொற்பாம்புதன்னைவிட்டு பெருமாளும்ஆட்டிவைத்தார்
ஆறக்குழலூதி ஆயனுமாட்டிவைத்தார்
பாடாதசிந்துகவி பாடினார்மாயவரும்
அரசாளும்நாயகியாள் அல்லிபிடத்தாதியர்கள்
பூங்காவனத்தில் பொய்கையருகாக
மாயன்பெருமாளும் மகாமயக்கந்தான்செய்து
மகடிக்குழலூதி மன்னவரும்மாட்டிவைத்து
ஆட்டினார்நாகமும் ஆடுதுகாண ந்நேரம்
பாட்டுக்கிசைவாகப் பாம்புகளாடுதுகாண்
தண்ணீர்குடமெடுத்துத் தண்ணீர்க்குவந்தவர்கள்
பாம்பாடும்பாவனையை பைங்கிளிமார்தான்பார்த்து
அரசாளும்நாயகியாள் அல்லியரைதெண்டனிட்டு
நமதுமதுரைவளநாட்டில் வந்ததேதநற்பாம்பு
தண்ணீர்குளத்திலே தார்குழலேயாடுதென்றார்
பாம்பாடும்பாவனையைப் பட்டணத்திற்கண்டதில்லை
அந்தஅழகும்அதிசயமுங்கண்டறியோம்
என்றுஅவளுரைக்க யேந்திழையுந்தான்கேட்டு
அப்படிப்பட்டதொரு அழகுள்ளநற்பாம்பை
இங்கேயழையுமென்றாள் ஏந்திழையாளல்லியரும்
அப்படியேயோடி அழைத்துவந்துவிட்டார்கள்
பாம்பைத்திறந்துவிட்டார் பார்வேந்தர்மாயவரும்
மகடிக்குழலூதி மாயவனாராடிநின்றார்
பாம்பாடும்பாவனையை பட்டணத்திற்கண்டதில்லை
மன்னன்மேல்சிந்தையுமாய் மயங்கினாள்மங்கையரும்

மாயவனைத்தான்பார்த்து மயிலனையாளல்லியம்மாள்
பாம்பையனுப்புமென்றாள் பைங்கொடியாள்தன்னருகே
அப்படியேநற்பாம்பு அவளருகேவந்ததுகாண்
பாம்புமடியேறப் பைங்கிளியும்பார்த்திருந்தாள்
முன்னழகும்பின்னழகும் முதுகில்மச்சரேகைகளும்
அரசாளும்நாயகியாள் அல்லியருந்தான்பார்த்தாள்
காண்டாவனமெரித்த காலையருச்சுனனும்
சொக்குபொடிபோட்டார் தேன்மொழியாளல்லியற்கு
மாதுசௌரியம்போய் மயங்கினளருச்சனன்மேல்
மயங்கியெழுந்திருந்து மாயவரைத்தான்பார்த்து
பாம்பைபிடியுமென்றாள் பைங்கொடியாளல்லியரும்
அந்தப்பிடாரன் அடைவாகப்போனபின்பு
அரசாளும்நாயகியாள் அல்லியருந்தான்பார்த்து
ஆருயிரவனென்னும் அணிதிரளாம்பாண்டியர்கள்
தந்தையார்சீர்பாதந் தையலடிபணிந்து
தக்கப்புகழுடைய தருமருடதம்பியரை
காண்டவனமெரித்த காளையென்னுமருச்சுனரை
இந்தட்சணமே யியலாயழையுங்கள்
கலியாணம்கூட்டுமென்றால் காரிழையாளல்லியரும்
ஆருயிரவர்க ளணிதிரளாம்பாண்டியர்கள்
வற்றிக்கிடந்த வருள்பெரியகாவேரி
முட்டப்பெருகியே கரைபுரண்டுவந்தாற்போல்
தேகங்குளிர்ந்தாரே யிருதோளும்பூரித்து
தக்கப்புகழுடைய தருமர்தனஞ்செயற்கு
எழுதினர்பாண்டியர்கள் இன்பமாயோலைதன்னை
காண்டாவனமெரித்த காளையந்தஅருச்சுனற்கு
அரசாளும்நாயகியாள் அல்லிமலர்நாயகிக்கு
சித்திரைமாசத்திலே சீர்பத்தாந்தேதியிலே
சுக்கிரவாரமது தசமிபுனர்பூசம்
அன்றையவேளையிலே அருச்சுனற்குமல்லியற்கும்
கலியாணம்கலியாணம் காரிழைக்குகலியாணம்
கலியாணமென்றுசொல்லி கனமானயோலையிலே
இட்டேமுகூர்த்தமென்று எழுதினரோலையிலே
ஓலைகண்டநாழிகைக்கு உத்தமரேவாருமென்றார்

## கலியாணம்

என்றிருக்குமோலைதன்னை இராஜாக்கள்தான்பார்த்து
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அனைவோரும்தான்பார்த்து
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
இதுநல்லகாரியங்க ளென்றுமனதிலெண்ணி
சரியொத்தசம்பந்தம் ஆமென்றுதார்வேந்தர்
மதுராபுரிதனக்கு மன்னர்கள்பயணமானார்
துரோபதைநாககன்னி சுபத்திரையும்பயணமானார்
மந்தாரக்குந்தியம்மாள் மாதாவும்பயணமானார்
வந்துமிறங்கினார் மதுரைப்பதிதனிலே
அரனார்திருவுளத்தால் அர்ச்சுனற்குமல்லியற்கும்
செய்யுஞ்சடங்குவகை செய்தார்கள்வேதியர்கள்
மங்கிலியந்தானெடுத்து வாள்விசையன்தான்தரித்தான்
மாதுகழுத்திலே மங்கிலியஞ்சாற்றினபின்
கூடியிருந்தார்கள் குங்குமக்கட்டிலே
அருச்சுனனும்அல்லியரும் அமர்ந்திருந்தாரன்னேரம்

## புலந்திர னுற்பத்தி

இப்படியாகவேதான் அனேகநாட்சென்றபின்பு
பாலகனுண்டானான் பைங்கொடியாளல்லியற்கு
பத்துமாதஞ்சென்று பாலகனைப்பெற்றெடுத்தாள்
பெற்றாள்புலந்திரனை பேருமிட்டாளல்லியரும்
வளர்த்தாள்புலந்திரனை வைத்திருந்தாளல்லியரும்

## புலந்திரனுக்கு கலியாணம்

ஐந்துபிராயமது அடைவாய்வளர்ந்தபின்பு
தேசத்தழகுமன்னன் திரியோதிரன்தங்கை
துன்னுங்கருங்குழலாள் துற்சடையாள்தன்மகளை
அந்த-காரிழையாள்மாது கலந்தாரிநாயகத்தை
போரஞ்சாமன்னர் புலந்திரவீரியற்கு
கலியாணம்பண்ணவே காரிழையாளல்லியரும்
சரியொத்தசம்மந்தம் தார்குழலாள்வேண்டுமென்று
வேண்டுமென்றுசொல்லி விரும்பியேமங்கையரும்
ஐவரும்நூற்றுவரும் அப்பவேகூடியொன்றாய்
கூடிமணஞ்செய்தார்கள் குமாரன்புலந்திரற்கு
கலியாணஞ்செய்துமே கடுகிமுடிந்தபின்பு

இப்படியாகவே அநேகநாள்சென்றபின்பு
தேசத்தழகுமன்னன் திரியோதிரப்பெருமான்
பருவமதயானை பஞ்சவர்களைவரையும்
உருவமதயானை உத்தமர்களைவரையும்
வலியவேதானழைத்து மாயத்தால்சூதாடி
பாரவனவாசம் பஞ்சவர்கள்போனபின்பு
அன்றுமுதலாக அர்ச்சுனனார்புத்திரனும்
காரிழையாள்மாது கலந்தாரிநாயகியும்
அவரவர்கள்வீட்டில் அருமையாய்வளர்ந்துவந்தார்
தங்கள்தங்கள்தாய்மனையில் சதுருடனேவளருகிறார்

## அல்லி கொலுச்சபை

அப்போது அல்லியவள் அரசாளும்நாயகியாள்
அஞ்சாப்பெரும்புலியா ளரிவையிளமங்கையரும்
ஆசாரமண்டபத்தில் அருங்கிளியாள்வீற்றிருந்தாள்
எண்டிசைக்குஞ்செங்கோல் எதிரொருவரில்லாமல்
தப்பாதரசாண்டாள் தாமரைசூழ்நாயகியாள்
முத்துவளநாடும் முடிகவியும்பெண்பெருமாள்
பட்டமுஞ்செங்கோலும் பாராளும்பெண்பெருமாள்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளல்லியரும்
கொம்பேரிடையாள் கொலுகலைந்தபிற்பாடு
வண்டார்குழலாளும் மாளிசையிற்போய்புகுந்து
சிங்காதனத்திலே தேன்மொழியும்வீற்றிருந்தாள்
தனக்குக்கவரியிடுந் தாதிமுகம்நோக்கி
வயிரக்கவரியிடும் மூப்பிமுகம்நோக்கி
முத்தின்கவரியிடும் மூப்பிமுகம்நோக்கி
செம்பொன்கவரியிடும் தேன்மொழியே நீகேளாய்

## அல்லி சொற்பனங் கண்டது

நேற்றையராத்திரியில் நித்திரைபோம்போது
சொற்பனங்கண்டேனான் துன்னுங்கருங்குழலே
தாமக்கருங்குழலாள் தாதியருங்கூறலுற்றாள்
ஏதேதுசொற்பனங்கள் எனக்கறியக்கூறுமென்றாள்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்கூறுகிறாள்
சோலைமலருடைய சொக்கநாதர்கோயிலுக்கு
சேவிக்கப்போனதாய் தேன்மொழியேநான்கண்டேன்

சோலைமலருடைய சொக்கரவர்பார்த்து
சிவனுரும்போது செங்கழுநீர்பூவெடுத்து
அங்கயற்கண்ணம்மை அகிலாண்டநாயகியும்
கொண்டுவந்துஎன்கையில் கொம்பனையுந்தான்கொடுத்
மைந்தர்புலந்திரற்கு வாங்கினேனேற்குமென்று [தாள்
ஏற்குமென்றுவாங்கி இந்திரனுர்கைகொடுத்தேன்
அதனையவன்வாங்கி அவன்தேவிகைகொடுத்தாள் [னே
மங்கையரும்செல்வன் பெற்றுவளர்ந்திருக்கக்கண்டே
நன்மையோதுன்மையோ நாயகியேகூறுமென்ருள்
தாமக்கருங்குழலாள் தாதியருங்கூறலுற்ருள்
ஆச்சிநீகண்டதினுல் அரியவேசொல்லுகிறேன்
உன்-மைந்தனுக்குமைந்தன் வாய்க்குங்காண்தப்பாது
புத்திரற்குபுத்திரர் பிறக்கும்புனற்கிளியே
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்கூறுவாள்
ஆரடிதாதியரே அன்னப்பசுங்கிளியே
பஞ்சவர்கள்நாடுவிட்டு பாரவனம்போயிருக்க
ஐவருங்காட்டகத்தே அனல்பிறந்தாள்காட்டகத்தே
மாலைமுடியார்கள் வனவாசம்போயிருக்க
வண்டார்குழலாளும் மயிர்விரித்துபோயிருக்க
எந்தவனத்திலே யிருக்கிருரென்றறியேன்
பஞ்சவரும்நாடுபெற்று நாமும்பயந்தெளிந்து
கொற்றவர்கள்நாடுபெற்று நாமுங்குறைநீங்கி
மன்னவர்கள்நாடுபெற்று வருங்காலமெக்காலம்
வண்டார்குழலாளும் வாழ்பெறுவதெக்காலம்
என்-மைந்தருக்குமைந்தருமாய்வாய்ப்பதுவுமெக்காலம்
எண்ணுதுமெண்ணியே ஏங்கிமுகம்வாடினுள்
தாமக்கருங்குழலாள் தாதியருங்கூறுகிருள்
நீ-கண்டகினவுதம்மை கன்னியரே நீர்கேளீர்
மைந்தருக்குமைந்தராம் வாய்க்கும்புனக்கிளியே

## புலந்திரன் பள்ளியறைக்கு அல்லிவந்து காண்கிறது

பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்கூறுவாள்
போரஞ்சாமன்னன் புலந்திரவீரியனுர் [ருள்
என்-பாண்டியப்பெருமாளின் பள்ளியறையெங்கேயென்
மண்டபத்துக்குள்ளிருக்கு மன்னவனுர்பள்ளியென்ருர்
எங்கேஎன்றுசொல்லி யெழுந்திருந்தாளல்லியரும்

சிங்காதனத்தைவிட்டுத் திகழக்குதித்திறங்கி
தாமக்கருங்குழலாள் தாதியரும்பபோது
கட்டழகிபெண்ணே கன்னியரேவாருமென்று
மெத்தெனவேதானடத்தி வேல்பொருதுங்கண்ணாளும்
சித்திரஞ்சேர்மண்டபத்தே சென்றாள்திருவணையும்
தாள்பூட்டிக்கொண்டு தனஞ்செயனும்பள்ளிகொண்டா
தாமக்கருங்குழலாள் தாதியரும்பபோது [ன்
பேர்சொல்லித்தானழைத்தாள் பெருமாள்புலந்திரனை
அஞ்சுவாய்மாதே ஆரணங்கேபோமென்று
வாளாயேந்தி வளநாடிதான்திறந்து
ஏந்தித்திறந்தாளே யிந்திரனார்பொற்கதவை
தருமமுடியானுந் தனித்துப்படுத்திருந்தான்
தேவியுடனேயிவர் திருத்தமுடன்கூடாமல்
தனியாகப்படுத்திருக்கச் சங்கரனார்கட்டளையோ
பகையான்தலைக்கடையில் பக்தசனவாசலிலே
மாதைதுகிலுரிந்த மாபாவிவாசலிலே
கோதையைத்துகிலுரிந்த கொடும்பாவிவாசலிலே
சகுனித்தலைக்கடையில் சண்டாளன்வாசலிலே
மாற்றான்றன்வாசலிலே மாலையிடப்பெற்றேனே
மற்றொருவாசலிலே மாட்டேனேமாகில்
பொற்கைவளநாடியரைப் போகவரப்பாரேனோ
வண்டார்குழலாளை வரப்போகப்பாரேனோ
கொம்பனையாள்செய்ததொரு குடிவாழ்க்கைப்பாரேனோ
இந்திரனார்தேவிசெய்யும் இல்வாழ்க்கைப்பாரேனோ
காணாதிருந்தேனே கண்ணற்றுளானேனே
பாராதிருந்தேனே பாவிநானானேனே
மைந்தர்புலந்திரனைப் பார்த்தாள்பலகாலும்
கால்கறுதொடங்கியே கரியகுழல்வாயும்
பார்த்தாள்பலகாலும் பார்த்தன்திருமகனை
தாமக்குழலாளும் தாதிமுகம்நோக்கி
இவர்-பொய்யாமொழியும் பொருமைதலையழகும்
ஐவர்தன்னழகும் ஆசாரப்பேரழகும்
தக்கபுகழுடைய தருமரைப்போலிருக்கும்
இந்திரனார்மார்பும் இடம்பெரியதிண்டோளும்
வெற்றிமதயானை வீமனைப்போலிருக்கும்
அழகும்இளமையும் அர்ச்சுனரைப்போலிருக்கும்

நகுலசகாதேவ ராஜாக்களைதோற்று
தம்மையுந்தோற்று தம்பிமாரையுந்தோற்று
ஆடைக்கொடிதோற்று ஆபரணமுந்தான்தோற்று
சேலைப்பணிகளுடன் சேர அவர்தோற்று
ஆயிரம்கோடிவெள்ளை யானைகளைத்தோற்று
ஐந்நூறுகோடிவெள்ளை அசுவங்களைத்தோற்று
ஆயிரங்கோடி யரம்பையரைத்தோற்று
நாடகசாலைப்பெண்கள் நாயகியைத்தோற்று
யானைகுதிரைகளை அரசரவர்தோற்று
சேயரவர்தோற்று செம்பொன்மணிமுடியார்
நித்திலங்குபூமுடியார் நீராழிமண்டபமும்
பாவையுருவதுபோல் பளிங்குமாமண்டபத்தில்
பேடைமலர்க்கண்ணாள் பேரரசிமண்டபமும்
காவலர்கள்தேவி கதைகேட்குமண்டபமும்
தருமமுடிபஞ்சவர்கள் சனியெண்ணெய்மண்டபமும்
பேர்பெரியபஞ்சவர்கள் புதனெண்ணெய்மண்டபமும்
செப்புமழகுடைய சிவன்பூசைமண்டபமும்
ஐவர்பூசைசெய்யும் அரனார்திருமேடை
இத்தனையுந்தோற்று இவ்வளவுமல்லாமல்
வித்தகனார்பாஞ்சாலர் பெற்றவிளக்கொளியே
கொற்றவர்கள்பஞ்சவர்கள் கொண்டகுடிவிளக்கை
தாமக்குலழாளை தருமரிடதேவியரை
என்-மாதாவையும்வைத்து மன்னவர்கள்தோற்றார்கள்
இத்தனையுந்தோற்று யிருந்ததொரும்மன்னவரை
தேசத்தழகன் திரியோதிரன்பாவி
மரவுரியைத்தான்கொடுத்து மன்னவர்களனைவரையும்
வெய்யலிலேதானிருத்தி வேந்தரைவைத்தானே
தோருவடிவழகி துரோபதையாள்நாயகியும்
தாமக்குழலாளைத் தருமரிடதேவியரை
வேல்பொருதுங்கண்ணாளை வீதிநடக்கவைத்தான்
அன்னநடையாளை அங்காட்டமாட்டிவைத்தான்
பாவையழகியரை பருந்தாட்டமாட்டிவைத்தான்
சொல்லாதுஞ்சொல்லியே துகிலுமுரிந்தானே
பஞ்சவர்கள்புண்ணியத்தால் பாஞ்சாலன்புண்ணியத்தா[ல்
தக்கபுகழுடைய தருமரிடபுண்ணியத்தால்
மாளாதிருந்து மாதுதுகிலாடை

உரியாதிருந்தது உத்தமியாள்பூவாடை
அழியாதிருத்தது ஆணழகிபூவாடை
உருவிகழுவிதுயில் வுடைகுலைந்தாளாமாகில்
வெற்றிமதயானை வீமராதுதண்டாலே
வீமராதுதண்டாலே வேந்தர்படைகளெல்லாம்
மாளுவதுஅன்றல்லோ மன்னன்பெரும்படைகள்
சாகிறதுஅன்றல்லோ தனஞ்செயன்கையம்பாலே
பஞ்சவருந்துரோபதையும் பாரவனம்போயிருக்க
எந்தவனத்திலே இருக்கிருரென்றறியேன்
எக்காட்டுக்குள்ளே இருக்கிருரென்றறியேன்
பண்ணையுடன்தும்பை பறட்டையுடன்காய்கிழங்கு
தின்றுஅவர்திரிய தேசாந்திரிபோல்
காடுசெடிதோறும் கடுகியவர்திரிய
எனக்குச்சுகமேது என்தாயேசொல்லுமென்ருர்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்கூறுகிருள்
அத்தனைக்கும்நீர்சலித்தீர் ஆனந்தவாழ்மார்பா
என்செய்வேனென்மகனே எழுத்துவசந்தப்பாது
தலையின்விதிப்படி தப்பாதொருக்காலும்
பாஞ்சாலிபட்டுரிய பஞ்சவர்கள்காடுறைய
உன்வலதும்என்வலதும் உத்தமனேயல்லவிது
தெய்வவலதுகண்டீர் செம்பொன்முடியாரே

புலந்திரனை கலந்தாரியிடஞ் சேர்ந்து வாவென்று
சொல்லுவது

உன்-மச்சினியாள்மீறி வளர்ந்துசமைந்தாளாம்
அத்தைமகள்மீறி அவள்வளரக்கண்டேன்நான்
கண்டேன்கனவிலே கட்டழகிசீர்வடிவை
மச்சினியாள்கோமிலுக்கு மன்னுநீசெல்லுமென்ருள்
பொற்கொடியாள்கோயிலுக்குபோய்வருவாய்புலந்திரனே

புலந்திரன் மறுத்துச் சொல்வது

போரஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறலுற்ருன்
பகைவரரண்மனைக்கு பாவியுடவாசலிலே
சகுனிபடுபாவி சத்துருவின்வாசலிலே
என்தாயைத்துகிலுரிந்த சண்டாளன்வாசலிலே
கோதையைத்துகிலுரிந்த கொடும்பாவிவாசலிலே

மாதுபொருட்டால் வலுவிலும்போவேனே
பஞ்சவரும்நாடுபெற்று நாமும்பயந்தெளிந்து
கொற்றவரும்நாடுபெற்று நாமும்குறைநீங்கி
மன்னவர்கள்நாடுபெற்று வந்தபிறகாக
வண்டார்குழலுடையாள் வந்ததின்பிற்பாடு
அன்னநடையென்னுடைய தாய்வந்தபிற்பாடு
பொற்கொடியாள்வாசலுக்குப் போவேன்காணுச்சியரே
இப்போதுபோவதில்லை என்தாயேஎன்றுரைத்தான்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லியவளேதுரைப்பாள்
தோளுக்குத்தோளு துணைவேணுந்தம்பியரே
காலத்திற்பெற்றபிள்ளை க்கைக்குதவிகண்டீரோ
போனீரேயாமாகில் புத்திரரைப்பெற்றிடுவீர்
பெற்றீரேயாமாகில் பேருண்டாய்வாழ்ந்திடுவீர்
பொற்கொடியாளரண்மனைக்குப் போவீர்புலந்திரரே
போரஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறலுற்றான்
எனக்குமோரையாண்டு ஏந்திழையாள்மூவாண்டு
மாலையிட்டபிற்பாடு மாதுஅறியாளே
தையலர்க்குமங்கிலியந் தரித்தவகைநானறியேன்
என்னையவளும் ஏந்திழையாள்தானறியாள்
நானும்வளர்ந்தது நாயகியும்தானறியாள்
என்-மாமியார்வீட்டை மறுபடியும்போனதில்லை
மாமியார்வீட்டிலே மருவுண்டுவந்ததில்லை [மென்றான்
பொற்கொடியாள்வாசலுக்குப் போகும்வகைசொல்லு

## பிள்ளைமீதில் கோபித்து விலங்குபோடச் சொல்வது

அரசாளும்நாயகியாள் அல்லியருந்தான்கேட்டு
சீறிபொறிபறந்து செவ்வாள்கருகவிட்டு
எதிர்த்தெதிர்த்துப்பேசுவதும் என்னுடன்சொல்லுவ
மறுத்துத்தடுக்கிறாய் மன்னகருவமென்ன [தும்
இந்தகருவத்தை யிப்போதடக்குவேன்பார்
கட்டழகிதாதியரே கருமானையழையுமென்றாள்
விஜயனார்தன்மகனை விலங்கிலேபோடுமென்றாள்
கால்விலங்குகைவிலங்கு கட்டவொண்ணுபெருவிலங்கு
மார்விலங்குதோள்விலங்கு மன்னனுக்குபோடுமென்றாள்

## புலந்திரன் சொல்வது.

போரஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறலுற்றான்
என்னைவிலங்குபோட என்செய்தேனென்தாயே
போகாதஅரண்மனைக்குப் பொற்கொடியேபோனேனோ
மங்கையர்கோவிலுக்கு வலுவிலும்போனேனோ
குடிமகள்வாசலிலே கூசாமல்போனேனோ
உப்பரிகையேறிதான் உயரக்குதித்தேனோ
கப்பல்கள்சோங்குகள் களவுகள்செய்தேனோ
என்னகொடுமைசெய்தேன் என்னைவிலங்கிலிட
அரசாளும்நாயகியாள் அல்லியருங்கூறுகிறாள்
ஆரடாதம்பியரே அல்லவென்றாற்போதாது
அத்தனையுமல்லாமல் அரசேநீர்கேட்டருள்வீர்
மச்சினியாள்மீறி வளர்ந்துசமைந்திருக்க
மாதுசிறையிருக்க மன்னவனேயாகாது
குடியாள்சிறையிருக்க கொற்றவனேயாகாது
நாடும்வராதுமன்னு நகருகளும்சேருது
ஊரும்வராதுகண்டீர் உத்தமனேஉந்தனுக்கு
மச்சினியாள்கோவிலுக்கு மகனேநீசெல்லுமென்றாள்
போரஞ்சாமன்னன் புலந்திரனும்கூறலுற்றான்
உன்-ஆக்கினைக்குத்தான்பயந்து ஆச்சியரேபோனாலும்
அவன்-கற்கோட்டைமுத்திரையுங் கர்னனுடகாவல்க [ளும்
சுத்திமதிலெழுப்பி சூரியனைக்காணமல்
பக்கத்திலெழுப்பி பகவானைக்காணமல்
வாசலுக்குஆயிரம்பேர் வாள்வீரர்காவலுக்குள்
உருவினஆயுதங்கள் வுறையிலேபோடாமல்
விழித்தகண்சிமிட்டாமல் மெல்லியிடமிருப்பார்
காசிவளநாடாளுங் கர்னனதிகாரன்
தாமக்குழலாளின் தலைவாசல்காப்பானும்
அத்தனையுந்தான்கடந்து ஆச்சியரேபோனாலும்
ஆயிரந்தாதி அவளருகேயிருப்பாராம்
அம்மாநீராடி ஆடுங்கழலாடி
விளையாடிவீற்றிருப்பார் மெல்லியராயிரம்பேர் [ன்றார்
பொற்கொடியாளரண்மனைக்கு போகும்வகைசெப்புமெ
அரசாளும்நாயகியாள் அல்லியருமேதுசொல்வாள்
ஆருமறியாதே அம்மானைக்காணாதே

அருகிருக்குந்தோழியர்கள் யாவருமறியாமல்
மாதினிடவாசலிலே மன்னவரே நீர்போவீர்
மேகப்புரவியது வேந்தனே நான்தருவேன்
என்னுணைமன்னு நீ இனியொன்றும்சொல்லாதே
மன்னு நீபேசாதே மன்னர்பெருமானே
தருமர்திருவாணை தம்பிமார் தன்னுணை
காடுறைந்தபஞ்சவர்கள் கட்டழகிதன்னுணை
பின்னையொன்றுஞ்சொல்லாதே பெருமாள்புலந்திரனே
மச்சினியாள்கோவிலுக்கு மன்னு நீசெல்லுமென்ருள்
போரஞ்சாமன்னன் புலந்திரனுமேதுசொல்வான்
அவர்-எந்தவனத்தில் இருக்கிருரோயென்றறியேன்
இதுவுமொருகாரியமாம் இவ்வாணைவந்ததென்ன
மாளவென்ருல்மாளுகிறேன் மாதாவேயிப்போது
ஆணைவிடுத்தாயேயென்று அடிவணங்கித்தெண்டனிட்
வந்துபணிந்தவனே வாளாலேதானெடுத்து [டான்
ஆணழகர்பஞ்சவர்கள் ஐவரிடயாணைவிட்டேன்
காடுறைந்தபாஞ்சாலி கட்டழகிஆணைவிட்டேன்
தருமருடஆணைவிட்டேன் தம்பிமார்ஆணைவிட்டேன்
மாதருடன்கூடி மருவிவருமளவும்
என்னுணைமட்டும் இருக்கட்டும்இந்திரனே
என்றுமவளுரைக்க யின்பமுடன்தான்கேட்டு
மாதாவின்பாதம் மலர்தூவிதெண்டனிட்டு
கொம்பனைக்குதெண்டனிட்டு கூறுவானிந்திரனும்
உம்மாணைக்கொண்டுநான் ஊர்வழிப்போவேனே
தாயாணைக்கொண்டுநான் தனிவழியேபோவேனே
போனுல்பலிக்குமோ பொற்கொடியேயெந்தனுக்கு
ஆணைவிடுமென்று அடிவணங்கிதெண்டனிட்டான்
அரசாளும்நாயகியாள் அல்லியருந்தான்கேட்டு
விட்டானேயாணையெல்லாம் வேந்தர்பெருமானே

அல்லி இந்திரனைக் குறித்துப் புறவி வாங்குவது

ஆகாயவான்புரவி அழைப்பித்துநான்வருவேன்
இந்திரரே நீரும் இங்கேயிருமென்றுசொல்லி
கட்டழகிநாயகியும் காவலிலேபோய்புகுந்து
ஆழச்சுனையில் அரசியருந்தானிறங்கி
காலோடுங்கண்ணுங் கனிவாயுங்கொப்பளித்து

வாயோடுபல்லும் மதிமுகமும்சுத்திசெய்து
தென்மதுரை நாடாளுந் திருநீற்றுக்காப்பணிந்து
சிந்தித்து நின்ருளே சிவனையடிபணிந்து
தேவேந்திரனை நினைத்தங்கேதெண்டனிட்டாள்
மைந்தன்புலந்திரற்கு வான்புரவிவேணுமென்று
மைந்தனுக்குசசகாயமாய் வரவழைக்கவேணுமென்று
ஆகாயவான்புறவி யாரணங்குவேண்டுமென்று
இந்திரரைநோக்கி ஏந்திழையுந்தெண்டனிட்டாள்
மருமகள்தானினைக்க மன்னவருந்தான்கேட்டு
தேவேந்திரருந்தான் தேவிமுகம்நோக்கி
கண்டாயோபெண்ணரசே கயற்கண்ணாள் நின்றவிடம்
தன்-மைந்தருக்குமைந்தருமாய் வாய்க்கவேவேண்டுமெ
புத்திரற்குபுத்திரராய் பிறக்கவேவேண்டுமென்று [ன்று
தவசுகள்செய்கிருள் தையலிளம்பிறையாள்
என்றுரைக்கயிந்திரனுர் இந்திராணிதான்கேட்டு
தேங்காய்க்குமூன்றுகண் தேசத்திலென்பார்கள்
ஒடுமைல்கண்ணுட்கு ஒருகண்ணேயுள்ளதுவும்
தோளுக்குத்தோளு துணைவேண்டுமிந்திரரே
அதனுலேயல்லவோ யாரணங்குவருந்துகிருள்
ஆகாயவான்புரவி அனுப்பவேவேண்டுமென்ருள்

## தேவேந்திரன் புரவி கொடுத்தது

தேவேந்திரபகவான் சிரித்துமனமகிழ்ந்து
வானத்துமேகங்கள் வானவர்கோன்வரவழைத்து
பார்த்தானேஇந்திரனும் பார்வைகள்கொள்ளாதே
இப்படிக்குப்போனுலே இந்திரற்குயேற்காது
என்றுஇவர் நினைத்து யின்பமுள்ளபேரனுக்கு
பூமியில்வாழ்கிற புரவியைப்போற்சோடித்து
அங்குபடிவைத்தலவோ அழகாயலங்கரித்து
நாலுகால்வண்டயமாம் நடுக்கழுத்திற்கொலுசுகளாம்
செம்பொன்சிறுசதங்கை சேர்த்தபலகரையும்
அப்பொன்னின்கிண்கிணியும் அழகாகபூட்டினுராம்
மாணிக்கந்தன்னுலும் வைடூரியந்தன்னுலும்
நெற்றிக்குச்சுட்டிகட்டி நேர்விழிக்குமையெழுதி
மெத்தைமடித்திட்டு மேலேயணேகோலி
சித்திரஞ்சேர்பட்டு சீராய்மடித்தியிட்டு

குப்பியில்சாந்தும் குழாவில்புனுகுகளும்
வாய்த்தயிலைச்சுருளும் வர்ணப்பலாக்காயும்
பட்டுப்புனுகுகளும் சவ்வாதுபரிமளங்கள்
பூவாலலங்கரித்தார் புலந்திரனுற்புரவிதன்னை
வகைவகையாய்ப்பூச்சரங்கள் வைத்துபுரவியிலே
ஜோடித்தலங்கரித்து சுந்தரற்குவேண்டுமென்று
தேவேந்திரபகவான் சிரித்துஅலங்கரித்து
எற்குமோஇப்புரவி இந்திரற்குயேற்குமென்று
தட்டிப்புரவியைத் தாமந்தவாழ்மார்பன்
குதிரைக்குபதேசங் கூறினுர்காதிலேதான்
ஆகாயம்போகாதே அவலோகம்போகாதே
செம்பொன்மணிமுடியான் தேவியுடகோவிலுக்கு
ஒருசாமப்பொழுதிலே உத்தமனைக்கொண்டுசென்று
இருசாமமங்கே இருக்குமட்டுந்தானிருந்து
விடியஒருசாமத்திலே விடுபட்டுவந்துவிடு
அப்போதுவான்புரவி அவருடனேசொல்லுகுது
அருளருளும்ஐயாவே அப்படியேயாகுமென்று
வந்ததுகாண்புரவி மதுரைவளநாட்டிற்கு
செம்பொன்கடிவாளம் தென்னுடிகைபிடித்து
மலர்காவிதான்கடந்து வைகைவளநாடியரும்

### புலந்திரனை அலங்கரித்தது

மைந்தனிருக்கிறதோர் மண்டபஞ்சென்றேறினுள்
மாலைமுடியானே மஞ்சநீராடுமென்ருள்
மஞ்சநீர்ச்சாலையிலே மன்னவனும்போய்ப்புகுந்து
ஆடைகளைந்துவைத்து ஆபரணந்தான்கழற்றி
கத்தியுடனேஅங்கி காவலுந்தான்கழட்டி
சேரவேதான்கழட்டி செம்பொன்மணிமுடியான்
கொற்றவர்கள்கோமானுங் குளித்துக்கரையேறினுன்
துப்பட்டிகொண்டு துவட்டினுர்சுந்தரிமார்
ஈரமுலரவே யிணைகவரிவீசினுர்கள்
ஆடையெடுத்துடுத்தி ஆபரணந்தான்பூட்டி
கச்சைவரிந்துகட்டி கத்திமிகச்சொருகி
தென்னல்முடிவேந்தன் திருநீற்றுக்காப்பணிந்து
சிந்தித்துநின்று சிவனையடிபணிந்து
செங்கழுநீர்பூவெடுத்து சிவனுரைத்தோத்தரித்து

கஸ்தூரிபொட்டுமிட்டு கண்டபெண்கள்சேர்ந்திடவே
மாணிக்கமண்டபத்தில் மன்னவனுஞ்சென்றானே
சிங்காதனத்திலே திரள்வீரன்வீற்றிருந்தான்
அரசாளும்நாயகியாள் அல்லியருங்கூறுகிறாள்
மைந்தர்புலந்திரனை மயிலனையாள்தான்பார்த்து
ஆனந்தவாழ்மார்பா அடிசலுக்குவாருமென்றாள்
சிங்காதனத்தைவிட்டு திகழக்குதித்திறங்கி
அமுதுண்ணுமண்டபத்தை ஆணழகன்சென்றானே
அரசாளும்நாயகியாள் அல்லியருங்கூறலுற்றாள்
இருமிருமென்று யிணைகடகங்கையமர்த்தி
பொற்கொடிக்குமேலே புலந்திரனும்வீற்றிருந்தான்
சிங்கமுக்காலி செம்பொற்றளிகைவைத்தாள்
கைக்குநீர்வார்த்தார்கள் காவலனார்வீரியற்கு
நீர்சுழற்றியூற்றி நிகர்வளைமுன்கையாலும்
போனகம்வாங்கிப் புரிகுழலாள்தான்படைத்தாள்
பத்துவகைக்கறியும் பதினெட்டுபச்சடியும்
நீர்கடகக்கையாலே நீரெடுத்துதான்கொடுத்தாள்
அறிவுடையநாயகர்க்கு ஆகாரந்தான்கொடுத்தாள்
அந்தவடிசல் அமுதுண்டபிற்பாடு
அத்தளிகைமாற்றி பொற்றளிகைமுன்னேவைத்து
போனகம்வாங்கி புரிகுழலாள்தான்படைத்து
காய்ச்சியபாலும் காட்டுமாங்கனிப்பழமும்
திரித்தியமுதுஞ் செலுத்தியநெய்பாலும்
கூட்டிப்படைத்தார்கள் கொம்பனைமார்தாதியர்கள்
அந்தஅடிசல் அமுதுண்டபிற்பாடு
கைகழுவநீர்வார்த்தார் காரிழைமார்தாதியர்கள்
உத்தமிமைந்தனுமாய் ஒக்கவுலாகொடுத்து
சித்திரஞ்சேர்மண்டபத்தில் தேன்மொழியாள்வீற்றிருக்
முடிவுபூஞ்சந்தனமும் மெல்லியருந்தான்வாங்கி [கு
அடைக்காயும்வெள்ளிலையும் அன்பாகத்தான்வாங்கி
மைந்தருக்குதான்கொடுத்து மாதுநல்லாளப்பொழுதே
தானுமிலையமிர்தம் தையலருந்தின்றாளே
மாதாயிளைப்பாற வான்கவுரிவீசினார்கள்
தாமக்கருங்குழலாள் தாதிமுகம்நோக்கி
கொண்டுவந்துபூட்டுமென்றாள் குமாரன்புலந்திரற்கு
மச்சினியாள்மெச்ச வகைவகையாய்பூஷணங்கள்

ஆபரணப்பேழை அலைகோதிதான் திறந்து
ஆனந்தமார்பனுக்கு ஆபரணந்தானெடுத்து
தெரிந்தபணிதிகளை செம்பொற்றளிகைவைத்து
கொண்டுவந்துமுன்னேவைத்தாள் கொம்பேரிடையா
தென்னர்பெருமான் திருமேனிநீண்டவல்லான் [ளும்
ஆனந்தமார்பனுக்கு அருகாகவந்துநின்று
முத்தினுருமாலை முகநிறையதான்றறித்து
வேதிச்சநற்புனுகால் மின்னமுகந்துடைத்து
கட்டழகர்நெற்றியிலே கஸ்தூரிப்பொட்டுமிட்டு
தேனல்லோதாரன் திருநீற்றுக்காப்புமிட்டு
ஈரெட்டுபூண்கடுக்கன் யிட்டுவிலன்காதில்
அந்தமுடிசூட்டி அழகாகப்பூட்டினர்
ஒருமுத்தேமுத்து உலகெல்லாம்பெற்றதுபோல்
பாரியமுத்துப் பரியமுத்துத்தாழ்வடமும்
நவரத்தினப்பதக்கமும் நாகரீகத்தாழ்வடமும்
ஆரப்பதக்கமும் அழகுசரப்பளியும்
பார்த்தபணிதிரமும் பருமுத்துத்தாழ்வடமும்
முன்கைமுதாரிகளு முழுகடகமோதிரமும்
சந்திரகடகங்கள் தாயத்துசோதிமின்ன
அஸ்தகடகமும் அழகானமோதிரமும்
முத்திரைமோதிரமு முன்கையிற்கடகமும்
பசும்பொன்பவுத்திரமும் சேர்ந்தகணையாழிகளும்
பொன்னினரைஞாணும் பூட்டினர்பொற்சலங்கை
கச்சையிறுகணைந்து கத்திமிகச்சொருகி
பாங்குகள்தான்சொருகி பாலனிடகாலில்
பூஞ்சிலம்புந்தண்டையும் பொன்மெட்டுந்தானணிந்து
ஆபரணமெல்லாம் அடங்கலுந்தான்பூட்டி
இழையாயிரம்பொன்பெற்ற இந்திரவர்னப்பச்சைவடம்
ஆனந்தமார்பனுக்கு ஆடைவரிந்துகட்டி
நிரஞ்சனமாகவே நிறைந்ததேமேனியெல்லாம்
இப்படியாக யியலாயலங்கரித்து
அரசாளும்நாயகியாள் அல்லியருங்கூறலுற்ருள்
மைந்தர்புலந்திரரைப் பார்த்துவளநாடி
கண் திருஷ்டிவாராமல் காப்பிடுங்கள்தாயென்ருர்
சந்தனமுஞ்சாந்தும் சவ்வாதுமிகவணிந்து

ஆலாத்திகாட்டுமென்றாள் ஆனந்தமார்பனுக்கு
முத்தாலேஆலாத்தி முப்பதுநூறாயிரம்பேர்

### புலந்திரனுக்கு தாயார் புத்திசொல்லுவது

ஆகாயவான்புரவி அலைதாரா நீரேறி
ஒருசாமப்பொழுதிலே உத்தமரே நீர்போய்
மந்திரவாள்தாரேன் மன்னர்பெருமாளே
வாள்வைத்தால்கதவு திறக்குங்காண்மன்னவனே
தானேதிறக்குங்காண் தனஞ்செயனேபொற்கதவு
போனார்போல் நீரும் பொற்கொடியையெழுப்பாதே
ஆராய்ந்துபார்த்து ஆணழகாமன்னவனே
கையாலேதட்டிக் காரிழையையெழுப்பாமல்
காலாலேதட்டி மங்கையரை நீயெழுப்பும்
சற்றேதான்தட்டலுமே தையலெழுந்திருப்பாள்
அவள்வாழும்பெருமைகளும் மாமன்மார்சேவகமும்
உத்தமர்கள்பஞ்சவரை ஓட்டியரசாளுவதும்
கட்டழகர்பஞ்சவரைக் காடோட்டியாளுவதும்
கர்னனிடவதிகாரம் காவலர்போர்வீரியமும்
ஏசாதுமேசி யெடுத்துரைப்பாளாமாகில்
உத்தரங்கள்சொல்லாதே ஒக்கநின்றுபேசாதே
கொற்றவனேயுந்தனுக்கு கோபம்வராமல்
அத்தனைக்குமுட்கொடுத்து அலைதாரா நீகேட்டு
எத்தனைசொன்னாலும் எனக்காக நீர்பொறுத்து
அன்னமேயிக்கோயி லார்க்கோவில்சொல்லுமென்று
ஆரணங்கேயும்முடைய ஆச்சிபேர்சொல்லுமென்று
மங்கையரேயும்முடைய மாமன்பேர்சொல்லுமென்று
அன்னமேயும்முடைய ஐயன்பேர்சொல்லுமென்று
மங்கைநல்லாள்தன்பேரும் மணவாளன்றன்பேரும்
ஆரமுடையாள் அடையாளஞ்சொல்லுமென்று
நிரூபஅடையாளம் நேரிழைக்குத்தான்கொடுக்க
தாரேனடையாளம் தையலர்க்குநீகொடுத்து

### அடையாளங் கொடுத்தது

அல்லிக்கொடியும் அழுத்தியசீராவும்
சீராருங்கச்சுந் திருமுடியுந்தான்கொடுத்தாள்
உன்-மாமிமாரிட்டதொரு பவுத்திரந்தான்கொடுத்தாள்

வாங்கிமுடித்துக்கொண்டார் மன்னர்பொருமானும்
மாதாஅடையாளம் வைத்தான்மடிதனிலே
அரசாளும்நாயகியாள் அல்லியருங்கூறுகிருள்
அரும்பாவிவாசலிலே அமிர்தம்புசியாதே
கஸ்தூரிபூசாதே கபடனதுவாசலிலே
தண்ணீர்குடியாதே தையலதுவாசலிலே
கொப்பளித்துநீரை குடியாதேவாருமென்ருள்
இருந்துஒருசாமம் ஏந்திழையை நீகூடி
வரவொருசாமத்திலே வந்துவிடுமென்ருளே
அருளருளுமென்ருரே அப்படியேயாகுதென்ருர்
போகவிடைதாருமென்று புலந்திரனுந்தெண்டனிட்டு
வந்துபணிந்ததொரு மகனுரைவாழ்த்தலுற்ருள்
நீரேஅரசாள்வீர் நீடூழிகாலமெல்லாம்
என்னைப்பெறுவீர் எதிர்த்தார்முடிபெறுவீர்
பிள்ளைபெறுவீர் பெருமாளைப்போல்வாழ்வீர்
வாழ்ந்திடுவீரென்று மனங்குளிரவாழ்த்திளுள்
தேனல்லோதாரனுக்கு திருநீறுதான்கொடுத்தாள்
வாய்த்தயிலைச்சுருளும் வர்னப்பழக்காயும்
காவலன்வீரியற்கு கைநிறையஅள்ளியிட்டாள்

## புரவியின் மகிமை

ஆதீனம்விட்டிறங்கி அன்னநடையாளும்
மாதாமுன்னடக்க மைந்தரும்பின்னடக்க
சிங்காரத்தோட்டத்தில் சென்ருள்திருவணையு
வான்புரவிதான்பிடித்து வைகைவளநாட்டியரும்
செம்பொன்னுர்கடிவாளம் தென்னுடிகைபிடித்து
மைந்தர்புலந்திரரை வளநாடிதான்பார்த்து
பூமியிலேவாழுகிற புரவியைப்போலென்னுதே
வையாளிவிரவியோடி வருவதெல்லாங்கண்டீரோ
கடிவாளங்கைவிடாதே கட்டழகாகற்பகமே
அங்குபிடிகைவிடாதே ஆணழகாமன்னவனே
மாலைமுடியோனே வழிபிடித்துவாருமென்ருர்
மச்சினியைக்கண்டபின்பு வாராமலிருக்காதே
வேந்தர்பெருமாளே விடியவிங்கேவாருமென்ருள்
அருளருளுமென்னுச்சி அப்படியேயாகுதென்று

### புலந்திரன் புரவிமேல் நடப்பது

மறுபடியுந்தெண்டனிட்டான் மாதாவின்சீர்பாதம்
புரவியைச்சுற்றிவந்து போகவிடைவாங்கினனே
அங்குபடிகால்வைத்து ஆனந்தவாழ்மார்பன்
உத்தமர்கள்புத்திரனும் உதாரிச்சுயேறினனே
ஏறினதுகண்டாளே யிந்திரரைக்காணமல்
பிள்ளையிவள்காணளே பெருமாள்புலந்திரரை
ஆகாயமாகவே அப்புறவிதான்பறக்க
அந்தரமார்க்கத்தில் அப்புரவியெழும்பினதே

### அல்லியம்மாள் புலம்பல்

மைந்தரைபோகவிட்டு வாடிமனந்தளர்ந்தாள்
போகமாட்டேனென்றனே வலியநான்போகவிட்டேன்
கர்னனறிந்தானே காவலர்கள்கண்டாரோ
நூலால்கடுந்திரளார் நூற்றொருவர்கண்டாரோ
மாலைமுடியானை வதைசெய்தாராமாயின்
மாளும்படியொழிய மண்ணிலிருப்பதில்லை [ல்வேன்
பஞ்சவருக்கென்னசொல்வேன் பாஞ்சாலிக்கென்னசொ
வெற்றிமதயானை வீமருக்கென்னசொல்வேன் [வேன்
அங்கவர்க்கென்னசொல்வே னருச்சுனற்கென்னசொல்
சோலைமலருடைய சொக்கரல்லோசெய்ததெல்லாம்
அவரிட்டகலகமல்லோ யாதொன்றுநானறியேன்

### அல்லி சொக்கநாதர் கோவிலுக்கு வந்தது

தண்டிகைதானிருக்க தையலருந்தானிருக்க
தானுவழிநடந்து தையலருமந்நேரம்
சோலைமலருடைய சொக்கருடகோவில்வந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டாள்
மைந்தர்புலந்திரற்கு வாட்டங்களில்லாமல்
மன்னர்புலந்திரனர் வந்தாரேயாமாகில்
ஆலாத்திபெண்கள் அதிசயமாய்த்தான்தருவேன்
காடைவராகனு மாணிக்கரத்தினமும்
செம்பொன்னின்முத்துகளும் சுவாமியேநானளிப்பேன்
தண்டில்வந்தபொன்னையெல்லாம் சங்கரனேநான்றருவே
கொண்டுவந்துநான்சொரிவேன் கோபுரவாசலிலே [ன்

மைந்தர்புலந்திரற்கு வல்வினையில்லையென்று
திருமுடியில்புஷ்பமது சேரவேதள்ளுமென்ருள்

### சொக்கர் மீனுட்சியை நோக்கிச் சொல்வது

சோலைமலருடைய சொக்கருந்தான்பார்த்து
அங்கயற்கண்ணுயகிவை அரனுருந்தான்பார்த்து
கண்டாயோமாதே நீ கயற்கண்ணுல் நின்ற நிலை
எத்தனைநேரமட்டும் இவள்கெஞ்சி நின்ருலும்
பொற்கொடிமாதருக்கு புஷ்பங்கொடுப்பதில்லை
அங்கயற்கண்ணம்மா எவள்முகத்தைத்தான்பார்த்து
எல்லோர்க்குக்கண்கள் இரண்டெண்டாராச்சியத்தில்
தேங்காய்க்குமூன்றுகண் தேசத்திலென்பார்கள்
ஓடமலர்கண்ணுட்கு ஒருகண்ணேயுள்ளதுகாண்
பிறந்தகனியானுள் பிள்ளை துணைவேணும்
அதனுல்வருந்துகிரு ளாரணங்கின்னேரம்
பொற்கொடியாள்மாதருக்கு புஷ்பமதுகொடுக்கவென்ன
சங்கருமப்போது சற்றேநகைநகைத்து
நங்கைபரிதாபந் தையலரேகண்டாயோ
வெட்டுவேன்குத்துவேன் விலங்கிடுவேனென்றுசொல்லி
ஆக்கினைகள்செய்து அவனையிவள்போகவிட்டாள்
எத்தனைநேரமட்டும் இவள்கெஞ்சி நின்ருலும்
பொய்கைவளநாடியர்க்குப் புஷ்பங்கொடுப்பதில்லை

### மீனுட்சி சொக்கருக்குச் சொல்வது

அங்கயற்கண்ணம்மை ஆதீனத்தைவிட்டிறங்கி
மகாதேவர்பாதமது வணங்கியேதெண்டனிட்டு
அங்கயற்கண்ணம்மை அருகில்வந்தென்னசொல்வாள்
ஆருயிரவர்களும் அணிதிரளாம்பாண்டியர்கள்
மாளுவோமென்று மலைமேல்தவமிருந்தார்
மாளாதேயென்று மலரிலவதரித்தார்
வீருகச்செங்கோல் செல்விசெலுத்தி நின்ருள்
மன்னன்விஜயன் மடலூர்ந்தமாதேவி
காளைவிஜயனுர் கட்டழகன்தேவியிவள்
சிறுவிரல்பாதம்ரெண்டும் சிலம்புக்கால்கொப்பளிக்க
செண்பகப்பூமேனடிகள் திருவினைக்குத்தானுகை
என்னைநேரமட்டாய் இளங்கொடியாள்கெஞ்சி நிற்க

இப்படிக்கிருக்க இதுவுமக்குத்தருமமல்ல
பொற்கொடிமாதுக்குப் புஷ்பமதுகொடுத்தால்
சந்தோஷமாயிடுவாள் தருமமுடியழகி
சங்கரருமப்போது தயவாய்மனமிரங்கி
சிவனுருமப்போது திருமுடியைத்தானசைக்க
ஏலங்குழலாளும் இருக்கையுந்தானிறைய
வாங்கிமடியில்வைத்தாள் மதுரைவளநாடியரும்

### சொக்கர் நன் பிள்ளைக்குத் துணைபோனது

சொக்கருங்கூட துணைபோகவேண்டுமென்றூர்
சிவனுருமப்போது தேவிமுகம்நோக்கி
ஆரமுலையாளே ஆளடிமையானேமே
அது-சந்தோஷமென்று சங்கரியுந்தான்சிரித்தாள்
சொக்கருங்கூடத் துணையாகத்தான்போனூர்
சந்நிதியைவிட்டுச் சுவாமியவர்போனூர்
தீர்த்தமும்நீரும் திருமாலைச்சந்தனமும்
கொண்டெதிரேதந்தார் கொம்பேரிடையாட்கு
தீர்த்தம்தெளித்தார்கள் திருநீற்றுக்காப்பணிந்தார்

### அல்லி கொலுவுக்கு வந்தது

சந்நிதியைவிட்டுத் தையலருந்தானமர்ந்தாள்
படித்துறையுந்தான்கடந்து பாண்டிவளநாட்டாளும்
கோபுரவாசல் கொம்பனையுந்தான்கடந்து
தென்னந்தெருவுகளும் தேரோடும்வீதிவிட்டு
மன்னர்தெருவுகளும் மாடோடும்வீதிவிட்டு
வாசற்படிகடந்து மண்டபஞ்சென்றேறினுள்
தாமக்கருங்குழலாள் தாதியெதிரேவந்து
காலுக்குநீர்கொண்டு காரிழைமாரோடிவந்தார்
கோவிலுக்குப்போய்வந்தேன் கொம்பனையேதாதிகளே
இதுகளொன்றுநான்வேண்டேன் கொம்பனையேதாதிக [ளே
பாவையழகியரும் பள்ளியறைபோய்புகுந்தாள்
தழுவணையில்கைகொடுத்து தையலரும்வீற்றிருந்தாள்
அன்றுமுறையுடையார் ஆயிரம்பேர்ஓடிவர
அத்தனைபெண்களையும் அனுப்பிவிடைகொடுத்து
மெல்லியர்களெல்லாம் விடைபெற்றுப்போனபின்பு
மங்கையரும்பள்ளிகொண்டாள் மாணிக்கமெத்தையிலே

விடிந்துவருவாரே வேந்தனையுங்காண்பேனே
வேல்பொருதுங்கண்ணாள் விசனமாய்பள்ளிகொண்டாள்

### புலந்திரன் புரவிமேற் போனது

அந்நேரமிந்திரனார் ஆகாயமார்க்கத்திலே
ஆகாயமாய்ப்பறந்து ஆணழகன்வான்புரவி
மதுராபுரிகடந்து வைகைவளநாடுவிட்டு
வனமாய்வனங்கடந்து மலைகுகைகள்தான்கடந்து
கூடல்வளநாடு குலவீரன்றான்கடந்து

### தருமாபுரங் காண்கிறது

தாமரைசூழ்அல்லிமகன் தர்மபுரங்கிட்டினனே
அத்திபுரத்தை அடுத்தாணலைதாரன்
எத்திசையுந்தோப்பும் எதிர்மலர்க்காவுகளும்
நாற்றிசையுந்தோப்பும் நல்லமலர்க்காவுகளும்
கொண்டாடிப்பூர்க்குமந்த குங்குமவெண்டாடை
நெடுநீலங்கோங்குவளை நீலவர்ணகஸ்தூரி
பூமரங்களத்தனையும் பூரித்துச்சொரிந்தனவே
மந்தாரைபுன்னைகளு மருவோடிருவாட்சி
மல்லிகைமுல்லை வாய்ந்ததொருசெண்பகம்
வாழுகின்றபுன்னைமரம் மாதுளம்பூவாசனையும்
திருவழகுசோலைகளும் தெய்வவுலகம்போல்
கண்டான்புலந்திரனுங் கண்கள்ரெண்டுங்கொள்ளாதே
இத்தனைநாட்டையும் இளவரையான்தான்பார்த்து
இப்பெரியநாட்டைவிட்டு எங்கொளித்தாரையன்மார்
எந்தவனங்காடுறைந்தார் என்னுடையஐயன்மார்
மாயத்தாற்சூதாடி மண்ணிழந்தார்பாண்டவர்கள்
கட்டழகனிந்திரனும் கண்களால்முத்துதிர்த்தான்
பூமரங்களத்தனையும் புலந்திரன்றான்பார்த்து
பஞ்சவர்கள்கோமானும் பார்த்தரதுமகனும்
வந்தாரேஇப்பொழுது மச்சினியாள்கோவிலுக்கு
என்னத்தைநாம்கொடுத்து இந்திரரைக்காண்கிறது
பூவாலேபச்சைவடம் புலந்திரனைக்காண்கிறது
கொண்டுவந்துபோத்தினர் கொற்றவர்கள்யிந்திரற்கு
பூமரத்தைப்பார்த்து புலந்திரனுங்கூறுகிறான்
காவலர்கள்பஞ்சவர்கள் காடுறைந்துபோயிருக்க

வண்டார்குழலாளும் மயிர்விரித்துப்போயிருக்க
ஆர்முடிக்கப்பூர்த்தீர்கள் அழகியபூமரமே
தாதியர்தான்முடிக்க சார்பாகப்பூர்த்தீரோ
மாற்றுன்முடிக்கவோ வந்துமலர்சொரிந்தீர்
பூமரங்கள்கூறும் புலந்திரனைத்தான்பார்த்து
ஐயாவேநீர்கேளீர் அடியேன்விண்ணப்பமதை
மாலைமுடிபாண்டவர் வனவாசம்போனவன்றே
காவலர்கள்பாண்டவர்கள் காடுறைந்தநாள்முதலாய்
தக்கப்புகழுடைய தர்மர்வனம்போனவன்றே
வண்டார்குழலாள் மயிர்விரித்துப்போனவன்றே
நல்லமழையுமில்லை நாட்டில்விளையுமில்லை
செந்நெல்விளைவுமில்லை தேசஞ்செழிப்புமில்லை
பூவுகள்மலர்ந்து பூமரங்கள்பூவாது
ஆவுங்கறவாது அரும்பாவிபட்டணத்தில்
வெள்ளியுந்தெற்கடைந்து வேந்தனும்போய்மறைந்து
கன்னியும்கால்மறத்து கடலுந்திசைமாறி
பாழாயிருக்குதையா பட்டணங்களத்தனையும்
வேந்தர்பெருமாளே மலராகநாமிருந்தோம்
மாலைமுடியானே வருகிறதுநாமறிந்து
இப்போதிலேதுளிர்ந்து இந்நேரம்பூபூர்த்தோம்
வருகிறநாளறிந்து மலர்சொறிந்தோமன்னவனே
வருவதற்குமுன்னமே மன்னவரேபோவோமே
போரஞ்சவீரன் புலந்திரனுங்கூறுகிருன்
ஒட்டினுர்பன்னிரண்டுவருடம் உத்தமர்கள்பஞ்சவரை
மாலைமுடிபாண்டவர் வருநாளுந்தானுச்சு
ஆளுவார்பாண்டவர்கள் மாளுவார்நூற்றுருவர்
நம்முதேநாடுகளும் நமக்குத்தான்ராச்சியமும்
ஏதுக்குமஞ்சாதே யிருமென்றுர்மன்னவரும்
அப்போதுபூமரங்கள் அழகுமெத்தைதான்போல
புட்பமெத்தைசோடித்து புலந்திரற்குதான்கொடுக்க

### தருமாபுரத்தில் அதிசயங் காண்கிறது

அப்பால்திரும்பி ஆணழகன்வருகையிலே
அக்காட்டில்வீற்றிருக்கும் அன்னமும்தாராவும்
மானுங்கலையுமே மயிலுங்குயிலினமும்
சித்தானைக்கன்றுகளும் சிறுத்தைபுலிகுட்டிகளும்

காட்டானைக்கன்றுகளும் கரடிபுலிசிங்கங்களும்
பாடிப்பரந்துவரும் பஞ்சவர்னகிளிகளும்
ஐந்துதலைநாகமது ஐவர்திருமகற்கு
மாணிக்கமின்னவே மணிவிளக்கால்கொண்டுவந்து
முத்துமுடிமன்னன் முன்கையிலேறுதுகாண்
மகாமிருகமத்தனையும் வந்தெதிரேகண்டது
வந்தெதிர்கண்டதை மன்னவனுந்தான்பார்த்து
போரஞ்சாவீரன் புலந்திரனுங்கூறுகின்றான்
என்னமாயிருந்தீர்கள் இத்தனைநாளிவ்விடத்தில்
பாண்டவர்கள்போனபின்பு பாலாமிர்தம்போதாதோ
தாயாதிவாசலிலே சத்துருவின்வாசலிலே
பகையாளிவாசலிலே பாலாமிர்தமுண்டீர்களோ
என்றுமிவருரைக்க மியலானமிருகமெல்லாம்
மகாமிருகங்கள்கூறும் மன்னன்முகம்நோக்கி
மாலைமுடிபாண்டவர்கள் வனவாசம்போனவன்றே
வண்டார்குழலாள் மயிர்விரித்தநாள்முதலாய்
மன்னவர்கள்ராஜாக்கள் வனம்போனநாள்முதலாய்
நாங்கள்-ஒக்கக்குடியிருப்போம் உத்தமரேயெல்லோரும்
கோங்குகரையிலே குடகுமலைநாட்டிலேயும்
அங்கங்கேசேர அமர்ந்திருந்தோமெல்லோரும்
மாலைமுடியாரே நீர் வருகிறசெய்திகண்டு
காணவிருப்பமுடன் காவலரேவந்தேன்காண்
போரஞ்சர்வீரன் புலந்திரனுங்கூறலுற்றான்
அவன்-ஒட்டியபன்னிரண்டில் ஒன்பதுந்தானுச்சு
மூன்றுவருஷமின்ன முடிமன்னராளுவதும்
அப்பாலேவீமன் அவர்கள்திருமுடியை
தெண்டுக்கிரைகொடுப்பார் திரியோதிரன்படையை
நம்மதேநாடுகளும் நமக்குத்தான்ராச்சியமும்
அஞ்சாதிருங்களென்று அப்புரந்தானடந்தார்

பாண்டவர்க ளரண்மனை காண்கிறது

ஐவரரசாண்ட அரண்மனையைக்கிட்டினனே
கொற்றவர்கள்தங்களது கொலுக்கூடங்காட்டினனே
பாண்டவர்கள்வீற்றிருக்கும் பாரமணிமண்டபத்தே
பொற்றூணும்நற்றூணும் பேரிகையுத்தரமும்
உத்தரமுஞ்சித்திரமும் ஒக்கநிழற்காட்ட

இட்டிருக்கும்மாதினமும் ஏறினமணிசிங்காதனமும்
போட்டிருக்குமந்த பொன்னுலேஆதினமும்
தருமராதுஆதினமும் சகலகலைஆதினமும்
வீமராதுஆதினமும் விசையனுராதினமும்
நகுலராதுஆதினமும் சகாதேவராதினமும்
மன்னவர்களாதினமும் மற்றுனேக்கண்டானே
தருமராதுஆதினத்தில் சண்டாளனுள்குருனே
பாண்டவர்கள்தன்னுடனே பகுந்தரசாளாமல்
பாதிஅரசுஅவர் பங்கிட்டுஆளாமல்
எதனுலேகாடுறைந்தார் யென்னுடையஐயன்மார்
தருமத்தையெண்ணியவர் தரணியிழந்தார்கள்
புண்ணியத்தையெண்ணியவர் பூமியிழந்தார்கள்
அரண்மனையைப்பார்த்து அழகியகண்முத்துதிர்த்தான்

## துரோபதை யரண்மனை காண்கிறது

தோராவடிவழகி துரௌபதையாள்வாசலிலே
தையலதுவாசலிலே தங்கப்பொன்னுற்சமைத்து
நாணற்கொடிமுறுக்கி நற்கொடியாமுத்தமுத்தி
பரனுஞ்சுடரும் பசும்பொன்னுலேயடித்து
மாணிக்கத்தாலும் வைடூரியத்தாலும்
ஆச்சிதலைவாசல்கண்டு ஆணழகன்வயரெறிந்து
மாளிகையுமிங்கிருக்க மண்டபமுமிங்கிருக்க
ஆண்டமனைகளும் அரண்மனையுமிங்கிருக்க
எழுநூறுதாதியர்கள் இணைகவரிதான்வீச
முந்நூறுதாதியர்கள் முறைசெய்துவந்துநிற்க
ஏறியிருக்குமந்த யிட்டசிங்காதனமும்
ஆச்சிமாரெல்லவரும் அடியாளையாளவந்தீர்
பறுகல்உறுத்தவே பறுமணல்கள்தானுதிர
காடுதலையிழுக்க கன்னிதுயில்முள்ளிழுக்க
கானலிலும்வெய்யலிலும் கதறியவர்திரிய
எக்காட்டுக்குள்ளே யிருக்கிருளென்தாயார்
ஆச்சிதலைவாசல்கண்டு அழகியகண்முத்துதிர்த்தான்
இந்திருமப்போது ஏங்கியழும்போது
கொண்டுபறந்ததப்போ குலவீரன்றன்புரவி

## புலந்திரன் அத்திபுரங் காண்கிறது

ஆகாயம்மார்க்கத்திலே அப்புறவிதான்பறக்க
அத்திபுரங்கண்டாரே ஐயர் திருமகனர்
அந்தவள நாட்டை அடுத்தது அப்புராவி
அம்பலமோவென்ருலோ ஐந்நூறுகாதவழி
இடம்பெரியவாசலது யெழுநூறுகாதவழி
தூணுக்குத்தூணுமங்கே தொண்ணூறுகாதவழி
ஆயிரங்காதவழி அகலமுள்ள அம்பலத்தில்
நானூறுக்காதமது நலம்பெரிய அம்பலத்தில்
முந்நூற்றுக்காதமது முத்தணிந்த அம்பலத்தில்
பொற்றூணும் நாற்றூணும் பேரிகைஉத்தரமும்
குளிர்ந்தசந்தனத்தூணுங் குங்குமநற்றூணும்
தூணுக்குத்தூணு துணைமலையாய்ச்சேர்ந்தது
மெத்தையலங்கரித்து மேற்கட்டுதான்கட்டி
சுத்தியலங்கரித்து தோரணங்கள்தான்கட்டி
கண்ணுடிசல்லிகட்டி காவலன்றன்னம்பலத்தில்
சங்கிழைத்தமண்டபமுந் தங்கமுத்துமாலைகளும்
எங்கெங்குஞ்சோதியிட எழில்முத்துமாலைகளும்
வந்துநிழல்காட்டும் மாணிக்கமாலைகளும்
வாடாததாமரையும் வந்துநிழல்காட்ட
முத்துமரகதமும் முழுபன்னீர்ச்சீலைகளும்
தங்கத்தாற்பொம்மைகளும் செங்கழுநீர்மாலைகளும்
செம்பொன்னுற்சீலைகளும் செம்பவளத்தூணுகளும்
எங்கெங்குஞ்சோதிவிட இராசாவினம்பலத்தில்
சித்திரஞ்சேர்மண்டபத்தில் செம்பவளமாலைகளும்
வந்துபரிமளங்கள் வாசனைகள்தான்வீச
வாழைகமுகுகளும் வர்னபலாச்சோலைகளும்
சேரவேநாட்டியே திகழ்பெரிய அம்பலத்தில்
நின்றவிடந்தோறும் நிலைதோறும்சப்ரமஞ்சம்
பார்த்தவிடந்தோறும் பந்தங்கள்தேர்விளக்கும்
காடைவிளக்குகளும் கைவிளக்குத்தேர்விளக்கும்
ஏணிவிளக்குகளும் எண்ணுததேர்விளக்கும்
தருமமுடியார்க்குச் சப்பிரநல்விளக்கும்
பந்தங்கள்சேர்வையும் பகல்வத்திபிடிபாணம்
பூவர்ணமத்தாப்பும் பொறிபாணந்தான்முழங்க

எத்திசையுந்தான்முழங்க யிட்டிருக்குமம்பலத்தின்
ஏறியிருக்குமந்த ஏழுமணிசிங்காதனமும்
வந்திருக்குமன்னர் மகாசேனைதன்னுடனே
முந்நூறுகோடி முடிமன்னரங்கிருக்க
ஈட்டிபிடிமன்னர்கள் யிளவரையரங்கிருக்க
பாங்குபிடிக்கிறதோர் படைமன்னரங்கிருக்க
கத்திபிடிக்குமன்னர் காவலர்களங்கிருக்க
கோடிலட்சங்கோடி கொற்றவர்களங்கிருக்க
சட்டைகழட்டாத சாமந்தரங்கிருக்க
வேதபிராமணரும் வேதியருமங்கிருக்க
பாஞ்சாலமகாராஜன் படைகளுமங்கிருக்க
காசிவளநாடாண்டார் கர்னனதுசேனைகளும்
துரும்பரையத்தேன்சொரியும் சோழன்பரிகலமும்
ஏடல்லோதாரனவன் இடும்பன்பரிகலமும்
ஆகமங்கள்வேதமோதும் அகஸ்தியனுர்தந்தருளும்
மதுரைபரிகலமும் வளநாடுசேனைகளும்
ஏழுலகராஜாக்க ளெங்கும் நிறைந்திருப்பார்
தங்கைமணவாளன் தறுதலையனங்கிருந்தான்
தருமமுடியழகன் சகலருமங்கிருந்தார்
முந்நூறுதாதியர்கள் முத்தின்கவரியிட
ஐந்நூறுதாதியர்கள் அஷ்டகவுரியிட
எழுநூறுதாதியர்க ளிணைகவுரிதான்வீச
பச்சோலைப்பெண்கள் பரிந்துகவிபாட
மேளவகைகளும் விருதுபலமுழங்க
கவியோர்கவிபாட கட்டியங்களார்பரிக்க
புலவரிருபுறமும் பூவருஷமாய்ச்சொரிய
கீதமேத்தும்ரம்பை கின்னரிகள்வாசிக்க
வீணைகள்கின்னரிகள் வேணபடிவாசிக்க
கர்னன்றிருமருங்கில் கட்டியபூச்சரங்கள்
திரியோதிரன்மருங்கில் சென்றுநிழலாட
திரியோதிரன்பந்தலில் சிறப்பாபூச்சரங்கள்
கர்னன்றிருமருங்கில் கண்டுசுழலமிட
அவர்குழலில்மாலை இவர்குழலில்தாவுட
இவர்குழலில்மாலை அவர்குழலில்தாவுட
ஏறியிருந்தார்கள் இருவருஞ்சிங்காதனத்தில்
கண்டான்புலந்திரனுங் கண்கள்ரெண்டுங்கொள்ளாமல்

பாண்டவர்தன்னுடனே பகுந்துஅரசாளாமல்
பாதிஅரசுஅவர் பங்கிட்டுஆளாமல்
எதிரிலேகாடுறைந்தார் என்னுடையஐயன்மார்
இக்கோடிராஜமன்னர் இருக்கஇடமிருக்க
ஐவரந்தபாண்டவர்கள் அவர்க்கிடமில்லையென்று
அந்நேரங்காட்ட அடித்தோட்டிவிட்டானே
நிற்குமோயிவ்வாழ்வு நிலைக்குமோயிவ்வரசு
இப்பெரியஅம்பலத்தில் இருந்தராஜர்தங்கள்முன்னே
கட்டழகியென்தாயார் கால்நடையாய்வந்தாளோ
பார்த்துமிருந்தாரோ பாண்டவர்களைவருந்தான்
கண்டுமிருந்தாரோ காளையவரைவருந்தான்
தக்கப்புகழுடைய தருமரதுஆயுதமும்
ஏழானைபலமுடைய இயல்வீமராயுதமும்
ஆனலழகுமன்னன் அருச்சுனனார்கையம்புவில்லும்
நாமக்கொடியுடைய நகுலரதுஆயுதமும்
சாஸ்திரக்கொடியுடைய சகாதேவர்கைவாளும்
ஏதுக்கென்றிருந்தது எங்களையராயுதமும்
தன்றேவிக்கில்லாத தைரியங்களேதுக்கு
வெற்றிமதயானை வீமாபொறுக்காரே
அருச்சுனராஜதுரை யார்சொல்லுங்கேளாரே
ஆர்சொல்லுங்கேளாரே ஐயமார்நால்வருந்தான்
தக்கப்புகழுடைய தருமர்சொற்கேட்பாரோ
அன்றுநான்சற்றே அறிந்திருந்தேனுமாகில்
தக்கபுகழுடைய தருமர்சொல்கேளேனே
நூலார்கடுந்திரளார் நூற்றொருவர்பூமுடியை
வெட்டிபலியிடுவேன் வீரமாகாளியற்கு
பட்டந்தரித்து பாருலகையாளவைப்பேன்
காவலர்களைவருடன் கைகட்டிசேவிப்பேன்
இதுபத்தினியாள்நின்று பரதவிக்கஅம்பலமோ
உத்தமியாள்நின்றுலகில் உறிகொடுத்தவம்பலமோ
பாவைமனமுருகப் பருந்தாட்டமாட்டிவைத்தேன்
அம்பலத்தைப்பார்த்து ஆணழகன்வயிறெறிந்து
கட்டழகன்கோமானும் கண்ணிறையமுத்துதிர்த்தான்
இந்திரனுமங்கே ஏங்கியழும்பொழுது

### புலந்திரன் கலந்தாரி கோட்டையைக் காண்கிறது

மேலாய்ப்பறந்தது வேந்தனதுவான்புறவி
காரிழையாள்மாது கலந்தாரிகோட்டைகளாம்
கற்கோட்டைமுத்திரையுங் கர்னனதுகாவல்களும்
ஆழமணல்பறித்து ஆகாயக்கோட்டைகட்டி
சுற்றிமதிலெழுப்பி சூரியனைக்காணுமல்
அஷ்டமதிலெழுப்பி ஆதித்தனைக்காணுமல்
வாசற்பதினெட்டும் வைத்திருக்குங்காவல்களும்
விழித்தகண்சிமிட்டாத மெல்லியற்குகாவல்களாம்
தாமக்குழலாட்கு தலையாரியோடிவந்து
நாகசுரமூத நற்கவரிகொம்பூத
கூடமுழங்கவே குலவீரர்நற்சூழ
கொக்கரித்துநாற்றிசையுங் கூத்தாடிபாடிவர
ஆர்ப்பரித்துஓடிவந்தார் அன்னைநடையாட்கு
கண்டார்புலந்திரருங் கண்கள்ரெண்டுங்கொள்ளாதே
இதுமாமன்காவல்களோ வைத்தவரிசைகளோ
என்றுநகைத்து இந்திரரும்பார்த்திருந்தார்

### சொக்கர் பிராமணர்போல் வந்து கர்னருக்குச் சொல்வது

மாலைமுடியானும் வருவதற்குமுன்பாக
சோலைமலருடைய சொக்கருமப்போது
பஞ்சாங்கவேதியன்போல் பரமன்வடிவெடுத்து
மன்னர்கருணன்முன்பு மறையவர்போலேவந்து
ஆள்வருத்தாய்காணுது அதிகருணவீரியரே
பத்திரமென்றுசொல்லி பரமனும்போய்மறைந்தார்
சொல்லியேபோய்மறைந்தார் சொக்கருமப்போது

### கர்னர் கலந்தாரி கோட்டை வருகிறது

அத்தேசநாடாளும் அதிகர்னவீரியரும்
காரிழையாள்மாது கலந்தாரிகோட்டைவந்தார்
எண்ணவொண்ணுமகாசேனை எண்பத்தெண்ணுயிரம்
உருவினஆயுதத்தை உரையிலேபோடாமல் [பேர்
விழித்தகண்சிமிட்டாமல் மெல்லியரைப்பார்த்திருந்தார்
தருமமுடியானும் தலைவாசல்வந்துநின்று
அத்தண்டகாவலரை அதிகர்னர்தான்பார்த்து

அந்திப்பொழுதிலே ஐவர்வந்துசொன்னரே
காவலர்கள்வீரயரே கண்ணுண்டாய்ப்பார்த்திருங்கள்
திட்டங்கள்சொல்லியே திரும்புமந்தவேளையிலே

### கர்னர் கலந்தாரிக்கு நடனசேர்வை வைத்தது

சுந்தரப்பூமுடியாள் தூக்கம்வருகுதென்று
கேளிக்கைவேண்டுமென்றுள் கிளிமொழியாள்நாயகமும்
அப்படியேநல்லதென்று அங்குராயசீர்கருணர்
நட்டுமுட்டுநாடகங்கள் நளமுடனேயனுப்பிவைத்தார்
சதுர்தீர்ந்துகொலுவதனில் தானமர்ந்தார்கொலுவத
அப்போதுமாதருக்கு ஆடலும்பாடலும் [னில்
பதினெட்டுமேளமும் பண்பாகத்தான்முழங்க
சிற்றிடையாள்மாதர்கள் சிலம்புகலகலென
ஆடலுங்கூத்தும் அரம்பையர்நாடகமும்
நாடகமும்கூத்தும் நடுநடுவேசிந்துகளும்
ஆடாதகூத்துகளும் ஆடினராயிரம்பேர்
கேளிக்கைபார்த்திருந்தாள் கிளிபவளவாயாளும்

### புலந்திரன் ஆகாயத்தில் அதிசயப்படுகிறது

ஆடல்பாடல்சத்த மாகாயந்தான்கேட்க
பெண்கள்குரலோசை புலந்திரற்குகேள்விபட
கோட்டையில்கேட்கிறது கொம்பனையாளிருப்பிடமோ
தேவடியாள்சந்தடியோ தேன்மொழியாள்வாசலிலே
காதுற்றுக்கேட்டிருந்தார் கனத்தபுரவியின்மேல்

### கலந்தாரிக்குச் சொக்கர் சொற்பனஞ் சாதித்தது

மாலைமுடியானும் வருவதற்குமுன்பாக
சோலைமலருடைய சொக்கருமேதுசொல்வார்
பஞ்சாங்கவேதியன்போல் பத்தினியாள்பக்கம்வந்து
மாதுநித்திரைசெய்கையிலே மறையவர்போலேவந்து
மங்கையரேயுன்னுடைய மணவாளன்வந்தான்காண்
வந்தான்காணென்றுசொல்லி மாயமாய்ப்போய்மறைந்
வாசற்படிதனிலே மன்னன்நிற்கக்கண்டாளே [தான்
ஏறிட்டுப்பார்த்ததுபோல் இந்திரனர்வடிவை
அலர்தாமரைநிறமும் மார்பவளச்செவ்வாயும்
மார்பில்பதக்கமும் வச்சிரமணித்தாழ்வடமும்
காதில்மணியழகும் கட்டழகன்ஒப்பனையும்

உத்தமர்கள்புத்திரன்றன் உறுமாலைகட்டழகும்
ஒருவர்க்கொருவர் உளந்துடிக்கப்பேசினதும்
உற்றூர்உறவுகளும் உறமுறைகட்டளையும்
மாணிக்கமெத்தையிலே மன்னவருஞ்சென்றேறி
வெற்றிலைகள்தின்று விரும்பிவிளையாடினதும்
தக்கோலந்தின்று தழுவிவிளையாடினதும்
மாதுவிடையில்லாமல் மன்னரெழுந்திருந்து
போனூர்போல்கண்டு பொற்கொடியும்கண்ணழித்தாள்
சொற்பனங்கண்டதல்லால் சுந்திரரைக்கண்டதில்லை
என்-ஜென்மமொழியுமட்டும் சிறையிருக்க நீதியுண்டோ
வண்ணல்சிறையிருக்க வைத்தீர்மகாதேவர்
இச்சிறைக்காக்கயென்னை ஈஷ்வரரேவைத்தீரோ
மைத்துனரைத்தானினைந்து மாதுமனந்தானுருகி
எக்காலம்செல்லுமோ இந்திரரைநான்காண
கண்டகனவையெல்லாம் காரிழைதன்னுடனே
தோழிமார்தன்னுடனே சொன்னேமேயாமாகில்
எந்நாளுமிந்நினைவே என்பார்களேந்திழைமார்
தாமக்குழலாளுந் தன்மதினல்தானடக்கி
வேல்பொருதுங்கண்ணாளும் விசாரத்துடன்படுத்தாள்

### கலந்தாரி தாதிமார் காற்று ஒடுக்கத்தால் வேறொரு மண்டபம் போய் படித்தது

ஆரணங்குதோழிமார் ஆறாயிரம்பேரும்
அம்மானூர்பந்து மாடுங்கழலாடி
உடனுகப்பள்ளிகொண்டார் உண்டானதாதியர்கள்
பாதியிரவும் பதினைந்துநாழிகைமேல்
வாரியெழுந்திருந்து மங்கையர்களெல்லோரும்
ஒடுக்கத்தினாலே உள்ளமெல்லாம்வியர்வைவிட்டு
அந்தவிடம்விட்டு அப்பாலேமண்டபத்தில்
சித்திரஞ்சேர்மண்டபத்தில் தேன்மொழிமார்படுத்தார்
மண்டபக்கூட்டத்தில் மங்கையவள்போய்படுக்க
ஒண்டிதனியாக ஒளிபிறந்தகண்ணாளும்
கண்டார்கருங்குழலும் கலந்தாரிநாயகியும் [ள்
வேல்பொருதுங்கண்ணாள் விசனமாய்பள்ளிகொண்டா

### புலந்திரன் கோட்டைக்குள் வருகின்றது

அந்தச்சமயத்தில் அழகுபுலந்திரனும்
ஆகாயமார்க்கத்திலே ஐவர்மகன்புரவி
மேலாய்ப்பறந்தது வேந்தனதுதன்புரவி
யாருமறியாமல் அங்கொருவர்காணுமல்
ஆறுசுற்றுக்கோட்டைக்குள்ளே அங்கொருவர்காணுமல்
தாதியர்களண்டையிலே தாவியிறக்கியது
ஏறிட்டுப்பார்த்திருந்தார் இந்திரருமப்போது
ஒக்கபணிபூண்டு ஒருநிறமாய்ப்பட்டுடுத்தி
கூடப்பணிபூண்டு கொம்பனேமார்பட்டுடுத்தி
தேன்மொழிமாரெல்லோருஞ் சேரப்படுத்திருந்தார்
அதுகண்டுபுலந்திரரும் ஐவரைமனதிலெண்ணி
ஆருயிரம்பேரில் ஆரென்றுநான்காண்பேன்
ஆரென்றுசற்றேநா ஞராய்ந்துபார்ப்பேனே
பூவனேமெத்தைகளில் பொற்கொடிமார்படுத்திருக்க
ஆரமுலேயாளே யாரென்றுநான்காண்பேன்
ஏதுக்குமிங்குவந்தேன் என்தாயார்கட்டளையால்
மண்ணுழிகாலமெல்லாம் வையகத்தையாண்டாலும்
பெண்புத்தியிப்போ பிடரியிலேயென்பார்கள்
ஏதுக்குநம்மையிங்கே இசைந்துவரவிட்டாளே
என்றுபுலந்திரரும் நெடுமூச்சுதானெறிந்து
கட்டழகிநாயகியை கண்டதில்லையென்னுளும்
காணுமல்நாமும் கனமதுரைபோனுக்கால்
வாளால்துணிப்பாளே மைந்தனென்றுபாராளே
வேந்தர்பெருமாளும் விசாரமிடும்போது

### புலந்திரனே புரவி இறக்கிவிட்டது

அப்போதுதன்புரவி அந்தவிடம்விட்டு
மாதுயிருக்குமந்த வாசற்படிமுன்னுலே
கொண்டுவந்துவிட்டது கொற்றவனுர்தன்புரவி
தாழுயிறக்கியே தருமர்திருமகனே
மேல்பறந்துநின்றது வேந்தனவன்புரவி

### புலந்திரன் கதவை திறந்தது

தாள்பூட்டிருந்ததொரு தையலதுபொற்கதவு
மந்திரவாள்தானெடுத்து வைத்தார்மணிக்கதவில்

தானுய்திறந்தது தையலதுபொற்கதவு
மெள்ளநுழைந்தாராம் மெல்லிபடுக்கையிலே

### புலந்திரன் பெண்சாதியைக் கண்டது

வாசற்படிதனிலே வந்துநின்றமன்னவனும்
வாள்மேலேகையைவைத்து மன்னவரும்பார்த்தாராம்
ஏறிட்டுப்பார்த்தார் இந்திரரும்தேவியரை
வளர்ந்தெழுந்தமார்பும் மாதுயிருஸ்தனமும்
திரண்டெழுந்தபூமுலைமேல் செந்தாமரையழகும்
கண்புருவம்ரெண்டுங் கருங்குருவிவாலதுபோல்
மூக்குத்திருவழகும் மூன்றும்பிறையதுபோல்
நாக்குத்திருவழகும் நான்காம்பிறையதுபோல்
பல்வரிசைஆணிமுத்தும் பார்க்கமுடியாது
தாடையிருபுறமும் தங்கப்பலகையைப்போல்
இருதுடையின்றன்னழகும் இளவாழைதண்டதுபோல்
அழகுதிருமார்பில் ஆபரணஞ்சோதிமின்ன
மாருமல்பூண்டதொரு மாணிக்கம்நின்றிலங்க
கண்டுபுலத்திரனுங் கண்கள்ரெண்டுங்கொள்ளாமல்
இப்படிக்குமீறி ஏந்திழையும்வளர்ந்திருக்க
வைத்தேனவன்சிறையில் மாபாவியானேனே
பள்ளியறைசோடிப்பை பார்த்தார்பலகாலும்
வண்டார்குழலாளும் வாழாப்பெண்ணுயிருக்க
மாதுக்குமாமன்மார் வைத்தவரிசைகளோ
ஏறிட்டுத்தான்பார்த் திந்திரரும்மெத்திசையும்
மெத்தையலங்கரித்து மேற்கட்டுந்தான்கட்டி
சுற்றியலங்கரித்து தோரணந்தான்கட்டி
தூணுக்குத்தூணு துணைமாலைதூக்கிவைத்து
கண்ணுடிசல்லிகட்டி கனக்கவலங்கரித்து
நான்குபுறமும் நவரத்தினக்கால்நிறுத்தி
சங்கிழைத்தசப்பிரமுஞ் சாதிலிங்கமாலைகளும்
சித்திரஞ்சேர்மண்டபமுஞ் சேரவலங்கரித்து
மல்லிகைமுல்லையுடன் வாய்த்தசிறுசெண்பகமும்
வந்துபரிமளங்கள் வாசனைகள்தான்வீச
முத்தாலேதோரணங்கள் முறைமுறையாய்க்கட்டிருக்க
பந்தலிலேநல்ல பவளக்கால்தூணிருக்க
சித்திரஞ்சேர்பூம்பட்டை சிறுகமடித்திட்டு

சாறுமணைபோட்டு தழுவணையுந்தான்போட்டு
ஊனுகைப்பூச்சொறிந்து ஓடமலர்கண்ணுட்கு
காம்பரிந்தவைங்கலப்பூ காரிகைக்குத்தான்சொரிந்து
மெல்லியப்பூம்பட்டு மேலேயணைபோட்டு
சந்தனமுஞ்சாந்தும் தையலர்க்குத்தானுமிட்டு
புனுகுடனேகஸ்தூரி போகவேதான்வைத்து
மடித்தயிலைச்சுருளும் வண்ணப்பலாக்காயும்
செம்பொன்றளிகை திருவணைக்குவைத்திருக்க
தங்கப்பதக்கம்வைத்து சந்தனக்கிண்ணம்வைத்து
கெண்டியிலேதண்ணீருங் கிளிமொழிக்குவைத்திருக்கும்
கற்பூரமுத்துக் காராவிநெய்வார்த்து
குத்துவிளக்குக் கொழுந்துபடத்தானேற்றி
இருபுறமுங்குத்துவிளக் கெரியவேயேந்திழைக்கு
பொம்மைபதுமைகளும் பொற்கொடியைச்சூழ்ந்திருக்க
அன்னநடையாட்கு அறுபதுமைதானிருக்க
வெண்சாமரைவீச மெல்லியற்குபொம்மையெல்லாம்
கட்டழகிநாயகிக்கு கைவிளக்குகொண்டுநிற்க
ஆரமுலையாட்கு ஆலாத்திகொண்டுநிற்க
செம்பிலேதண்ணீர்கள் சிலபொம்மைகொண்டுநிற்க
பொம்மைபதுமைகளை புலந்திரன்தான்பார்த்து
வரும்போதுசொன்னுளே வைகைவளநாட்டியரும்
ஆராய்ந்துமெத்தையை அன்புடனேதான்பார்த்து
பார்த்திருந்தோமென்றுசொல்லி பதறியெழுந்திருந்து
வாளுருவிகைபிடித்து மன்னர்பெருமாளும்
மாணிக்கமெத்தையை மன்னவனுஞ்சுற்றிவந்தான்
பொம்மையைக்கண்டானே பின்பொருபெண்ணறியான்
நீங்களோவென்றுசொல்லி நிற்றிலங்குபூமுடியான்
தானுஞ்சிறித்துமே தனஞ்செயன்கிட்டிவந்தார்
ஏறிட்டுப்பார்த்தாரே இந்திருந்தேவியரை
கொண்டமுடியழகும் கொம்பனையாள்சீரழகும்
பொருந்துமயிரழகும் பொன்பிறைசுட்டிகளும்
கட்டழகிநெற்றியிலே கஸ்தூரிபொட்டழகும்
இட்டதிருநீறு இருகாதில்குழையழகும்
மாணிக்கமின்னவே வைடூரியங்கள்மின்ன
ஆணிப்பொன்னுலிழைத்த அன்னத்திருகொப்புகளும்
மாணிக்கவாளி மயிரின்கீழ்சோதிமின்ன

உஞ்சலிட்டகாதுக்கு ஒற்றைப்பணிதிகளும்
காரைக்கழுத்தழகும் கட்டிவடந்தன்னழகும்
பாரியரெட்டை பவழத்துதாழ்வடமும்
முன்கைமுதாரிகளும் முழுகடகமோதிரமும்
சத்திரகடகமுந் தாயித்துசோதிமின்ன
அஸ்தகடகமும் அழகானமோதிரமும்
பாடகத்தோடும் பணிச்சிலம்புசோதிமின்ன
காலாழிபீலிகளும் கட்டழகிசீர்வடிவும்
காலைத்தொடங்கியே கரியகுழல்வரைக்கும்
ஏறிட்டுப்பார்த்தாரே இந்திரருந்தேவியரை
ஈஸ்வரனார்தேவியவள் ஈஸ்வரியுமீடலவே
மாயவனார்தேவியவள் மாதுமெதிரலவே
இந்திரனார்தேவியவள் இந்திராணியீடலவே
தாமக்குழலாளை தட்டியெழுப்பினால்
கூவியெழுந்திருப்பாள் கொம்பனைக்கென்னசொல்வேன்
ஓடிவருவாரோ உண்டானகாவலர்கள்
வேந்தன்புலந்திரனார் விசாரமிட்டுநின்றாரே

## பெண்ணைப் புலந்திரன் எழுப்புதல்

எப்படியெழுப்பலாம் ஏந்திழையையிப்போது
சந்தனத்தைவாரி தையலர்மேல்விட்டெறிந்தான்
சில்லென்றுரைக்க தேன்மொழியாளப்போது
பல்லியெச்சலிட்டதென்று படுத்தாளே தான்திரும்பி
அப்புரத்துக்கிப்புரமாய் அவள்திரும்பிதான்படுத்தாள்
அன்னநடைமாது அசையாமல்பள்ளிகொண்டாள்
போரஞ்சாமன்னர் புலந்திருந்தான்பார்த்து
கண்டாரேயிந்த கட்டழகிநித்திரையை
நாமானலாச்சுது நாயகியாள்நித்திரைக்கு
இன்னெருவரானல் இப்படியோநித்திரைகள்
நித்திரைசத்துருவு என்பதெல்லாங்கண்டோமே
நித்திராதேவியென்னும் நேரிழையைவேண்டினனே
ஒருசாமப்பொழுதிலே உத்தமியேயிங்குவந்தேன்
ஒருசாமமட்டாய் இருந்துவிளையாடி
வெடியவொருசாமத்துக்கு மேன்மையுடன்போகவேணு
இரவும்பகலும் இனிப்பிரியாயேந்திழையே [ம்
மாதினதுகட்டில்விட்டு மங்கையேநீபோய்வா

இன்றையராவுக்கு இடமுந்தான்வேண்டுமென்றான்
நித்திராதேவியிவள் நேரிழையாள்தான்பார்த்து
பூவணையைவிட்டுமே பொற்கொடியுந்தானிறங்கி
மங்கையர்கள்பள்ளிகொள்ளும் மண்டபத்துக்குள்புகுந் [தாள்
நித்திராதேவியவள் நேரிழையாள்போனபின்பு
போரஞ்சாமன்னர் புலந்திரவீரியரும்
தேவிமுகம்பார்த்து செம்பொன்முடியானும்
தேவேந்திரபகவான் திருநீற்றை தூவினனே
மந்திரவாளாலே மன்னவனுந்தட்டினனே

## கலந்தாரி புலந்திரரைக் கண்டது

சற்றேதான்தட்டலுமே தாமக்குழலாளும் [த்து
பொட்டெனவேகண்விழித்து பொற்கொடியுந்தான்பார்
உள்ளம்நடுங்கி உடம்பெங்கும்விடவிடென்று
ஆரமுலையாட்கு அடித்தொடையுங்கால்நடுங்கி
பூவணையைவிட்டுமே பொற்கொடியுந்தானிறங்கி
மாணிக்கதூணருகே மயில்போல நின்றாளே
ஏறிட்டுப்பார்த்தாளே இந்திரனார்சீர்வடிவை
அங்குராயமென்பார்கள் அவரல்லகாணுமென்பாள்
அம்மான்மாரென்பார்கள் அவரல்லகாணுமென்றாள்
காடுறைந்தபாண்டவர்கள் நாவலர்களானக்கால்
மாலைமுடியாரென் மாமன்மார்வந்தாரோ
அங்கவர்காணுமவன் அல்லவர்தான்பார்த்து
முடிகணியும்பாண்டவர்கள் முதுகாயிருப்பார்கள்
ஏதோயிவரும் இளசாயிருக்குறாரே
எண்ணப்பிராயமது இருபதாய்க்காண்கிறதே
வாலைப்பிராயமது வயதுபதினாறிருக்கும்
வந்தாரொருவராய் மாளிகைக்குள்ளாக
தாதிமாரில்லாமல் தனியேயிருந்தேனே
வந்தவரிங்கே வலியபிடிக்கவந்தால்
நாயகனார்தாமெதிரில் நாக்கைபிடுங்கிக்கொள்வோம்
மாளும்படியொழிய மண்ணிலிருப்பதில்லை
கற்கோட்டைமுத்திரையும் கர்னனிடகாவலெல்லாம்
இத்தனையுந்தான்கடந்து யிங்குவந்தான்யாரோதான்
வாசற்போயாவரையும் வதைசெய்துவந்தானோ
மாலைமுடியானும் மதிலேறிவந்தானோ

ஆருமறியாமல் அரண்மனையில்புகுந்தானே
ஏறிட்டுப்பார்த்தாளே யிந்திரனூர்சீரழகை
வாசற்படியிலே மன்னவருந்தானறிந்தார்
வாள்மேலேகையை மன்னவரும்வைத்திருந்தார்
முத்தினுருமாலை முடிமேலேநட்டிருக்க
கட்டழகர்நெற்றியிலே கஸ்தூரிபொட்டுமிட்டு
இட்டதிருநீறும் இருகாதுதன்னழகும்
பூவிட்டகச்சையின்மேல் பொற்சட்டையுஞ்சொருகி
சொருகியசட்டைத் துவளத்திருவழகும்
சாவிநிலாவை சரிபிடிக்கும்கண்மலரும்
மார்பிற்பதக்கமும் வச்சிரமணிதாழ்வடமும்
தாலிப்பதக்கமும் சன்னல்பின்னல்தாழ்வடமும்
ஆரப்பதக்கமும் அழகுசரப்பளியும்
செம்பொன்பதக்கமும் சொந்தச்சரப்பளியும்
முன்கைமுகாரியும் முழுக்கடகமோதிரமும்
முத்திரைமோதிரமும் முன்னங்கைக்கடகங்களும்
கச்சைகட்டுமென்மருங்குள் கத்திசொருகழகும்
அலைதாமரை நிறமும் அரபவளச்செவ்வாயும்
காலைதொடங்கிக் கரியகுழலளவாம்
ஏறிட்டுப்பார்த்தாள் இந்திரனூர்தன்னழகை
சந்திரர்சூரியருந் தாமும்எதிரலவே
இந்திரனூர்தாமு மிவருக்கெதிரலவே
ஈஸ்வரனூர்தாமு மிவருக்கெதிரலவே
பேரும்பெரிய பெருமாளெதிரலவே
இவன்வடிவுமொப்பனையு மாளவென்றுவந்தானோ
திருவழகுமொப்பனையுஞ் சிதறவென்றுவந்தானோ
நான்-கூடினேமானுக்கால் கோவென்றுசாவலாமோ
இவன்-மாளியதுமுன்னாக மன்னவனையாரென்று
மாணிக்கத்தூண்மறைவில் மயில்போலேதானின்று
பூஞ்சிலம்பாகமும் போதவேசேர்ந்துவிட

### கலந்தாரி புருஷனேன்றறியாமல் வைகிறது

கட்டழகிநாயகியுங் கைநீட்டிவார்த்தைசொல்வாள்
கூறுவாள்வாய்திறந்து கோதுங்கிளிபோலே
அஞ்சாமல்வந்தவன் நீ யார்காணும்சொல்லுமென்றாள்
கற்கோட்டைமுத்திரையுங் கர்னனதுகாவல்களும்

இத்தனையுந்தான்கடந்து யிங்குவந்தகாரணமேன்
வாசற்காப்போர்யாவரையும் வதைசெய்துவந்தாயோ
மாலைமுடியானேஎன் மதிலேறிவந்தாயோ
உன்னழகோவென்றால் உவமையிடப்போகாது
என்னழகுமெங்கே எவ்விடத்தில்கண்டுவந்தாய்
முன்பின்பழக்கம் முகப்பழக்கந்தானுண்டோ
காலைகடைசந்தைகொள்ள கன்னியரைக்கண்டதுண்
அந்திகடைசந்திகொள்ள ஆணழகாகண்டாயோ [டோ
பொய்கைகரைதேடி போய்முழுகக்கண்டாயோ
வைகைக்கரையிலே வசந்தமாடக்கண்டாயோ
வீதிபுறத்திலே வெளியேநிற்கக்கண்டாயோ
உப்பரிகைமேலேறி உலாவுகையில்கண்டாயோ
எங்கேயென்னைக்கண்டாய் இவ்விடத்தில்வந்துநின்றாய்
தாண்டிக்குதித்தாயோ தங்கத்திருமதிலை
எகிறிக்குதித்தாயோ எந்தன்திருமதிலை
எகிறிக்குதித்தாலும் எழுகுவலைக்காவலுண்டு [யோ
காட்டானைக்காண்கிலையோ கண்டதுண்டஞ்செய்கிலை
பெண்ணுளரண்மனையில் பெண்புலிகள்காவலுண்டு
பெண்புலிகள்காண்கிலையோ போஞ்சிபொட்டுக்கொல்லலை
மலைநாகங்காண்கிலையோ வாரிவிழுங்கலையோ [யோ
போங்காணெழுந்திருந்து பொன்மணிவாசல்விட்டு
கேளாதுபோலே கேட்டிருந்தார்புலந்திரரும்
மற்றுமிளங்கொடியாள் மயிலனையாளேதுசொல்வாள்
ஊமைச்செவிடோ உணர்வில்லாவீரியரோ
செவிட்டுப்படுவானே திறமையில்லாமன்னவரோ
காதுமக்குகேட்கிலையோ கன்னிநான்சொல்லுவது
என்னையெங்கேகண்டாயோ என்னழகுசிந்திவிட
சீதைபடையாத திருவழகுபடைத்தானே
அகலிபடையாத ஆணழகுபடைத்தானே
பாழாச்சிறையிருக்க மனைதேடிவந்ததென்ன
வந்தவரானாலும் வாய்திறந்துபேசாமல்
மௌனமாய்நீயிருந்தால் வாளுக்கிரையாயிடுவாய்
ஆர்பெற்றபாலகனே அன்னீதமாய்மாளவந்தாய்
போடாநீயெழுந்திருந்து பொற்கதவைதாள்பூட்ட
எழுந்துநடமன்னவனே என்கதவைதாளனைய
அப்படியும்பேசாராம் அழகுள்ளஇந்திரனார்

பேசாமல்தானிருக்க பெண்கொடியுங்கோபித்து
மன்னன்முகம்நோக்கி மடந்தையருங்கூறுகிருள்
தாரார்புகழுடைய தருமர்மருமகள்நான்
வெற்றிமதயானை வீமர்மருமகள்தான்
இரட்டையர்மருமகள்நான் திட்டமுடன்சொல்லுவேன்
ஆணுலேகெட்டவர்கள் ஆருமில்லைவையகத்தில்
பெண்களால்கெட்டகதை புண்ணியரேசொல்லுகிறேன்
ஸ்ரீராமர்தேவியவள் சீதையென்னும்பெண்ணரசை
தென்னிலங்கைராவணனுஞ் சிறையெடுத்தான்மாபாவி
இராவணனுஞ்சிறையெடுக்க இராமர்வெகுகோபமதாய்
இலங்கையைத்தானழித்து ராவணனைக்கொல்லலையோ
பெண்ணுலேமாண்டானே பேரானராவணனும்
என்னுலே நீமாள முன்னுல்தலைவிதியோ
என்னுலே நீமாண்டால் உன்னைப்பெற்றுளலையாளோ
பெண்டிருந்தாள்வாடாளோ புத்திகெட்டமன்னவனே
போடா நீமன்னவனே புறப்பட்டவழிதேடி
அவ்வார்த்தைசொல்லியும் அதற்குமிவர்பேசாராம்
கல்லுமனதுடையாள் காரியத்தைபார்ப்போமென்று
மனைவிமனமறிய மௌனமாய்த்தானிருந்தார்
கட்டழகிமாதுநல்லாள் கலந்தாரியேதுசொல்வாள்
காவலைத்தாண்டிவந்த கட்டழகாமன்னவனே
காவலர்கள்கண்டாலே கத்திக்கிறையிடுவார்
பொற்கருணர்கண்டாலே போடுவார்பலியாக
திருவழகும்பாவனையுஞ் சிதறவென்றுவந்தாயோ
வேண்டுமென்றுசொல்லி விரும்பித்தபசுபண்ணி
மாதவத்தால்பெற்றெடுத்த மாதாவறியாளோ
உன்-ஆசசியறியாமல் அரண்மனைக்குவந்தாயோ
ஆறுமறியாமல் ஆணழகாவந்தாயோ
வந்தவரலாற்றை வாய்திறந்துசொல்வாய்நீ
ஏதுக்குமிங்குவந்து இறக்கிறுயுன்னுயிரை
குருமாதருக்காக குடியிருந்தார்மெத்தவுண்டு
தருமமுடியானே தருமமாய்ச்சொல்லுகிறேன்
தேவிக்காய்மாண்டவர்கள் தேசத்தில்கோடியுண்டு
உத்தமனேவீரியனே உன்னுயிரிருந்ததென்றுல்
தேவியரைக்கொள்ளுவாய் சிறுவரைப்பெற்றிடுவாய்
குலமாதர்தாமொழிய விலைமாதராகாதோ

விலைமாதராகாதோ வேறொருத்திகிட்டாதோ
கொம்பேரிடையானே கோவிலிலேதேவடிமார்
அதிலொருத்தியாகாதோ அதிசயமுள்ளவனே
நூலால்கடுந்திரளார் வதைசெய்துபோட்டிடுவார்
மாலைமுடியானே வதைசெய்துபோட்டிடுவார்
காசிவளநாட்டாருங் கர்னருன்னைக்கண்டாக்கால்
ஏடல்லோதாரனவன் இருபிளவாய்போட்டிடுவான்
காடுறைந்தபாண்டவர்கள் காவலர்கள்கண்டாக்கால்
மாலைமுடியானேயென் மாமன்மார்கண்டாக்கால்
வெற்றிமதயானை வீமரிருந்தாக்கால்
செம்பொன்றிருமுடியை தெண்டுக்கிறையிடுவார்
வயிரத்திருமுடியை வாளுக்கிரையிடுவார்
வெட்டிபிளந்திடுவார் வீமரதுதெண்டாலே
அதுவுந்தானல்லாமல் அரசாளுந்நாயகியாள்
அல்லிமலரிலே அவதரித்தபெண்பெருமாள்
அரசாளும்நாயகியாள் அல்லியென்மாமியார்
ஆரவிளமுலையாள் அறிந்தாளேயாமாகில்
வாளாலேவெட்டி எறிந்திடுவாளென்மாமி
கூறுபங்குபோடுவாள் கொம்பனையாளென்மாமி
ஆரோயிவளென்று ஆகடியம்பேசாதே
வேறொருத்தியென்றுசொல்லி வீம்புகளைப்பேசாதே
மற்றொருத்தியென்றுசொல்லி வம்புகளைப்பேசாதே
எழுந்துநடவுமென்றாள் ஏந்திழையாளப்போது

## புலந்திரன் பெண்சாதி சொல்லுக்கு அதிசயப்படுவது

போரஞ்சாவீரன் புலந்திரனுந்தான்கேட்டு
மனையாட்டிசொன்ன வார்த்தையதுகேட்டு
கட்டாணிவார்த்தைகளும் கைநீட்டிப்பேச்சுகளும்
ஒக்கநின்றுபார்த்ததில்லை உத்தமியாளென்தாயார்
தேவியதுவாய்பிறப்பை திரள்விஜயன்தான்கேட்டு
அரைத்திருந்தசந்தனத்தை அள்ளியறைந்தாப்போல்
வற்றிகிடந்த வருள்பெரியகாவேரி
முட்டப்பெருகியே கரைபுரண்டுவந்தாற்போல்
தேகங்குளிர்ந்தாரே இருதோளும்பூரித்து
பூரித்திருதோளும் பொன்னாபரணமெல்லாம்
இத்தனைவார்த்தைக்கும் ஏனென்றுங்கேளாமல்

மௌனமாய்த்தானிருந்தார் வாசற்படிதனிலே
பொற்கொடியாள்மாது புண்ணியரைத்தான்பார்த்து
மாதுமையாள்வெறுத்து மன்னனைத்தூஷணித்து
கோபத்துடன்தானிருந்தாள் கொம்பனையாளப்போது

## புலந்திரன் பெண்சாதியைப் பார்த்துச் சொல்வது

போரஞ்சாமன்னர் புலந்திரவீரியரும்
தேவியின்றன்முகத்தை திரும்பியவர்பார்த்து
அன்னநடையாளே அமிர்தப்பசுங்கிளியே
வாழும்பெருமைகளும் மாமன்மார்சேவகமும்
மன்னர்பெருமைகளும் காவலர்பேர்சேவகமும்
இத்தனையுஞ்சொல்லி எடுத்துறைத்தாய்பெண்மயிலே
மங்கிலியத்தோடே மயிலணையே நீயிருக்க
கொண்டார்பெருமை குடிப்பெருமைசொல்லலையே
ஆளன்பெருமை அரிவையரேசொல்லலையே
வண்டார்குழலாளே வாழாப்பெண்ணுயிருக்க
நீர்செய்தகுற்றங்கள் நேரிழையேதானுமுண்டோ
சொல்லுஞ்சொல்லுமென்று செவிகொடுத்துகேட்டிருந் [தார்
கோபம்பெருகிக் கொம்பனையாள்கண்சிவந்து
ஆரமுலையாளும் அளவற்றகோபமதாய்
மாணிக்கத்தூண்மறவை மயிலணையுமாராய்ந்து
கொள்வினையுமங்கே கொம்பனையுமாராய்ந்து
கூட்டுறவுகொண்டு கொற்றவனேவந்தாயோ
வந்தவழிபார்த்து மன்னவனே நடவுமென்றாள்

## புலந்திரன் பெண்சாதியை வளப்பங் கேட்கிறது

ஆரணங்குசொல்லுகையில் அதுகேட்டுயிந்திரரும்
அன்னமேகோவில் ஆர்கோட்டைசொல்லுமென்றார்
ஆரணங்கேயும்முடைய ஐயன்பேர்சொல்லுமென்றா
மங்கையரேயும்முடைய மாமன்மார்பெயருமென்ன
மாலையிட்டுக்கொண்ட மணவாளன்பெயருமென்ன
தாலிகட்டிக்கொண்ட தலைவனதுதன்பெயரும்
உன்னுடையபெயரும் உறையுமென்றாரிந்திரரும்
பெயருரைப்பாயானால் போவேனெழுந்திருந்து
சொன்னபிறகுதான் சுந்தரியேநான்போவேன்
சொல்லாதபோனால் தோகையரே நான்போகேன்

சொல்லுஞ்சொல்லுமென்று செவிகொடுத்துகேட்டி
நின்றவள்விசாரமிட்டு நெடுமூச்சுதானெறிந்து [ருந்தார்
கண்டகனவை கயற்கண்ணுள் தானினைத்து
பேர்கெட்டுவேர்பிடுங்க புண்ணியரேவந்தீரோ
ஆணுலுங்குறைவில்லை ஆனதொருமன்னவனே
என்றுயிளமுலையாள் எண்ணுதுமெண்ணுகிருள்
மதுரைவளநாட்டாரும் வந்தாரோவென்றறியேன்
வாழ்பாண்டிமன்னர் வந்தாரோவென்றறிறேன்
ஆனந்தவாழ்மார்பர் அவரேயிவரானுல்
மெத்தவுதாசினங்கள் வேந்தரைச்சொன்னேமே
இவ்வளவுமுட்கொடுத்து இருந்துமிகக்கேட்டாரே
ஆச்சியுடனே அறிக்கையிட்டுசொல்வாரோ
அவரோஇவனுரோ யாதுமறிகிலேனே
என்னவிதுமாயமோ ஏதுந்தெரியவில்லை
பெயருரைத்தோமானுல் போவாரெழுந்திருந்து
மாணிக்கத்தூண்மறவை மங்கையருந்தானும்விட்டு
வேல்பொருதுங்கண்ணுள் வெளிப்புறமாய்வந்துநின்று
கைகட்டிச்சொல்லுகிருள் கட்டார்கருங்குழலாள்
கட்டழகாவிந்தமனே கலந்தாரியரண்மனைதான்
எங்களையாதேத்தரசன் என்தாயார் துற்சடையாள்
மாமன்மார் நூற்றெருவர் மண்ணுளும்பூபதியாள்
அம்மான்மார் நூற்றெருவர் அரசாளும்பூபதியாள்
தேசத்தழகுமன்னன் திரியோதிரப்பெருமான்
போரால்மிகுந்ததொரு பெருந்திருவாளென்மாமி
அருமையாயெனைவளர்க்கும் அம்மானதிகர்னர்
பொற்கருனர்தேவி பொன்னுருவாளென்மாமி
என்பேர்கலந்தாரி எழுந்துநடமன்னவனே
இந்திரனுர்தேவிதான் எழுந்துநடவுமென்ருள்
இந்தவகைப்பெயரும் ஏந்திழையேசொன்னுயே
கொண்டவர்கள்பெயரோ கொடுத்தவர்கள்தன்பெயரோ
எவர்களதுபெயரோ எனக்கறியச்சொல்லுமென்ருர்
அவ்வார்த்தைகேட்டு அருங்கிளியுமேதுசொல்வாள்
சொல்லுகின்ருள்மாது துலங்குநவமணிபோல்
தாரார்புகழுடைய தருமரவர்பாண்டவர்கள்
வெற்றிமதயானை வீமன்மகாராஜன்
ஆணலழகுமன்னன் அர்ச்சுனராஜதுரை

நகுலசகாதேவரென்னும் நலம்புகழும்பாண்டவர்கள்
மாமன்மாரைந்துபேர் மாமியாரேழுபேர்
துரௌபதையும்சுபத்திரையும் தோகைபவளக்கொடி
நாககன்னிபோகவதி நருநுசலாள்மின்னொளியும்
அல்லிமலர்தனிலே அவதரித்தபூவையரும்
எந்தனுக்குமாமியார் எழுந்துநடமன்னவனே

**கலந்தாரியை புருஷன் பெயர் சொல்லுமென்றது**

கேட்டுப்புலந்திரருங் கிருபையுடனேதுசொல்வார்
இப்போதெரிந்தது யேந்திழையேபெண்ணணங்கே [ரூர்
மாலையிட்டான்புருஷன் மணவாளன்பேர்சொல்லுமென்
தாலிகட்டிக்கொண்ட தலைவன்பேர்சொல்லுமென்ரூர்
மணவாளனென்றுசொல்ல மனதுமிகத்தளர்ந்து
துக்கித்துபெண்மயிலுஞ் சொல்லிநடுநடுங்கி
சொன்னல்தான்போவான் சுந்தரப்பூமுடியான்
என்றுயிளமுலையாள் எடுத்துரைப்பாள்மன்னவற்கு

**கலந்தாரி புருஷன் பெயர் சொன்னது**

கேளுங்காண்மன்னவரே கிளிமொழியாள்மணவாளன்
இந்திரனுரென்புருஷ ரென்பேர்கலந்தாரி
இப்பவென்ருல்தெரிந்ததோ எழுந்துநடவுமென்ருள்
போரஞ்சாவீரன் புலந்திரருங்கூறலுற்ருன்
இந்திரனுரென்ருயே இருவருண்டுராச்சியத்தில்
அண்டத்துயிந்திரனே ஆகாயயிந்திரனே
வேர்பிரித்துசொல்லுமென்ருர் வேந்தர்பெருமாளும்
காரிழையாள்மாது கலந்தாரியேதுரைப்பாள்
ஆகாயயிந்திரனுக அவளிடதேவியென்ருள்
அருச்சுனனுரீன்றெடுத்த அழகுள்ளவிந்திரனுர்
போர்க்கஞ்சாமன்னன் புலந்திரவீரியனுர்
அவருடையதேவியென்று அரியவுரைத்தாளே
அத்திபுரமு மடங்கலுமென்னுதென்ருள்
அந்தவளநாடு மடங்கலுமென்னுதென்ருள்
தென்பாண்டிநாடாளுஞ் சேரவேயென்னுதென்ருள்
செம்பொன்படுந்துரையும் தீவுகளுமென்னுதென்ருள்
பவளம்படுந்துறையும் பட்டணமுமென்னுதென்ருள்
ஐவரும்நூற்றுவரும் அன்புடன்வாழுகையில்

கொற்றவர்கள்யாவருங் கூடியிருக்கையிலே
மகாராஜராஜரவர் மருமகள்வேண்டுமென்று
சரியொத்தசம்பந்தந் தையனல்லாள்வேண்டுமென்று
மாலையிட்டாரெந்தனை வளநாட்டுயிந்திரற்கு
திரும்பிப்பகையாச்சு தென்னவர்க்குந்நூற்றுவர்க்கும்
பாண்டவர்களைவரும் பாரவனம்போனபின்பு
அன்றுமுதலின்றளவும் அழைத்துவரயாருமில்லை
மாலையிட்டுக்கொண்ட மணவாளன்மைத்துனரும்
மணவாளநாட்டிலே மன்னருந்தானிருக்க
மைத்துனனூர்வைத்த வன்சிறைகார்க்கிறேன்யான்
அவர்வைத்தசிறையிலே வாடுகிறேன்மன்னவனே
போரஞ்சாவீரனவர் புலந்திரன்தான்கேட்டு
சிறையென்றுசொல்லுகையில் தென்னன்பெருமானும்
காவலர்கள்வீரியனுங் கண்ணிறையழுத்துதிர்த்தான்
அங்கவளைக்காணுமல் அழுதகண்ணீர்தான்துடைத்து

புருஷன்தானென்று புலந்திரன் சொல்வது

போரஞ்சாவீரனவர் புலந்திரனுங்கூறலுற்றான்
காரிழையாள்மாது கலந்தாரிநாயகியே
உன்னை-மாலையிட்டுக்கொண்ட மணவாளன்யான்காணு[ம்
தாலிதரித்ததொரு தர்மமகன்யான்காணும்
கொண்டுசிறையில்வைத்த கொற்றவனும்யான்காணும்
மதுரையைவிட்டுவந்தேன் மங்கையரேயிப்போது
அனந்தலெழும்பியென்னை ஆச்சிவரவிட்டாள்காண்
ஆருமறியாமல் அரிவையரேயிங்குவந்தேன்
ஓமப்புகையிலே யுத்தமியேயானிருந்தேன்
தையலேமங்கிலியம் தரித்தவரும்யான்காணும்
சுந்தரியேயுன்னுடைய சுண்டுவிரல்பிடித்த
மன்னர்பெருமாள் மணவாளர்யான்காணும்
அன்னமேநீயெனக்கு அத்தைமகள்காணும்
காடுறைந்தபாண்டவர்கள் காவலர்கள்தன்மகன்யான்
வேறொருவரென்றுசொல்லி விசனமதுவேண்டாம்
மற்றொருவரிங்கே வருவாரோகாவலிலே
கற்கோட்டைமுத்திரையுங் கர்னனதுகாவல்களும்
நூலார்கடுந்திரளார் நூற்றொருவர்காவல்களும்
இத்தனையுந்தான்கடந்து யிங்கேவருவாருண்டோ

அரசாளும்நாயகியா ளல்லித்திருமகன்யான்
ஐவர்பயின்றெடுத்த அழகுள்ளவிந்திரன்யான்
போரஞ்சாவீரன் புலந்திரன்யான்காணும்
ஆர்ணங்கேநா னுனக்கு அம்மான்மகன்காணும்
வேறொருவரென்று விகற்பங்களெண்ணாதே

## கலந்தாரி அடையாளங் கேட்பது

என்றுரைக்கமன்னவரும் யேதுரைப்பாள்நாயகியும்
மாதுயெடுத்துரைப்பாள் மைத்துனரைத்தான்பார்த்து
மதுரையிலிருந்துவந்த மைத்துனருமானுக்கால்
மாமியடையாளம் மன்னவரேதாருமென்றாள்
அத்தையடையாளம் ஆணழகர்தாருமென்றாள்
போரஞ்சாவீரன் புலந்திர னுங்கூறுகிறான்
வரும்போதுதந்தனள்காண் வையைவளநாட்டாளும்
வையைக்கரைதனிலே வந்துசெபஞ்செய்கையிலே
சிவபூசைசெய்கையிலே தேன்மொழியாளடையாளம்
கட்டழகியடையாளம் கைநழுவிவிட்டேன்காண்
வையைக்கரைதனிலே வைத்துமறந்துவிட்டேன்
வைத்துமறந்துவிட்டேன் மயிலணையேயென்றுரைத்தார்
மாதுகருங்குழலாள் மைத்துனரைத்தான்பார்த்து
எங்களம்மார்தன்னுடனே அறிக்கைவிட்டுசொல்லவில்
காவலர்கள்தம்முடைய கர்னருக்குச்சொல்லவில்லை [லை
சுற்றியருகிருக்குந் தோழியற்குச்சொல்லவில்லை
இன்றையராத்திரிக்கு இன்பமுடன்போய்படுத்து
நாளையராத்திரிக்கு ராஜாவேநீவாருய்
மாமியார்கையில் வாங்கிவந்தாளடையாளம்
மாணிக்கமெத்தையிலே மருவயிடந்தருவேன்

## புலந்திரன் அடையாளங் கொடுத்தது

போரஞ்சாவீரன் புலந்திர னுந்தான்கேட்டு
இவள்-கட்டாணிவார்த்தைகளும் கைநீட்டிபேச்சுகளும்
வாய்விளங்கப்பேசுகிற மங்கையரைத்தான்பார்த்து
இந்தாருமென்று எடுத்துமவள்கைகொடுத்தார்
கண்டாளடையாளம் கடுகெனவேதான்வாங்கி
உள்ளேநுழைந்து ஒருசொம்புஜலமெடுத்து
பூஷணத்தைசுத்திசெய்து பூப்போட்டுதெண்டனிட்டு

அத்தையடையாளம் அன்பாகத்தானெடுத்து
பெட்டியிலேயடைத்து புலந்திரனுர்முன்புவந்தாள்
வையைவளநாட்டா ளும்மைமறந்தாளோ
திருடிக்கொண்டுவந்தாயோ தென்னமுடிவேந்தா
நம்பேனொருநாளும் நாயகனேயுந்தனை நான்
மைத்துனர்மெய்யானல் மாணிக்கத்தூண்பிளந்தால்
அத்தைமகனென்று அன்பாயிடங்கொடுப்பேன்
மாதுகலந்தாரி மயிலணையாள்சொல்லுகையில்
போரஞ்சாமன்னன் புலந்திரவீரியரும்
பார்த்தார்பலகாலும் பாண்டவர்புத்திரரும்
ஆரை நினைத்தானே ஐவர்திருமகனும்
சோலைமலருடைய சொக்கரைத்தானினைந்தார்
நஞ்சையமுதுண்ட நாதரைத்தோத்தரித்தான்
அரனுர்செயலாலே ஆரணங்குபொற்றூணு
தானய்வெடிந்ததுவே தைபலதுபொற்றூணு
மாதுகலந்தாரி மைத்துனரைத்தான்பார்த்து
மாமிமகன்மெய்யானல் மதிலோடுகற்கோட்டை
எட்டியேதானடந்தா லிருக்கவிடந்தருவேன்

### புலந்திரன் கோட்டையைக் கடக்கவைத்தது

மாதுஅவளுரைக்க மன்னவருமேதுசொல்வார் [ன்
அட்டாளும்சொக்கரென்னும் ஐயரைத்தான் துதித்தா
காமனைக்கண்ணலெரித்த கர்த்தரைத்தான் துதித்தான்
அப்படியேநடந்ததுவே அவளுடையகற்கோட்டை
எப்படியோ நடந்து இருப்பிடத்திற்சேர்ந்ததுவே
அப்படியும்நம்பவில்லை ஆரவிளமுலையாள்
போர்க்கஞ்சாமன்னர் புலந்திரரும்நீரானல்
வாசற்படிதனிலே மணிப்பதுமைகட்டிருக்கும்
மணிப்பதுமைவாய்திறந்து மன்னவரேசொன்னுக்கால்
வயிரமகுடந்தருவேன் மைத்துனரேயென்றுசொல்லி

### புலந்திரன் மணிப்பதுமையைப் பேசவைத்தது

இல்லாமற்போனுக்கால் சொல்லாதெழுந்துநட
அவ்வார்த்தைதான்கேட்டு அழகுள்ளஇந்திரனுர்
விலங்குக்கும்குத்துக்கும் வெட்டுண்டுசாகாமல்
அறியாமலிங்குவந்தேன் ஆரணங்குகோட்டைக்கு

ஆரை நினைத்தானும் அளவற்றசிந்தையிலே
பிட்டுக்குமண்சுமந்த புனிதரைத்தான்தொழுதான்
காலனைத்தானுதைத்த கர்த்தரைத்தான்தொழுதான்
சொக்கரைத்தானினைந்து தொழுதானேதார்வேந்தன்
மாயாண்டிகிருடையினுல் மணிப்பதுமைவாய்திறந்து
சொல்கிறதுமணிப்பதுமை சொர்னக்கிளிபோலே
தருமர்திருமகன்காண் தாரார்கருங்குயிலே
கூடிமருவிடுங்கள் கொற்றவருந்தேவியுமாய்
சொல்கிறதுமணிப்பதுமை சொர்னக்கிளிபோலே
காதாரக்கேட்டாளே கலந்தாரிநாயகியும்
மந்திரக்காரனோதான் மலையாளவித்தையுண்டோ
ஏமாத்தவந்தவனோ ஏதுமறிகிலேனே

**கலந்தாரி தூணை வரவழைத்தது**

எண்ணுதுமெண்ணி இளங்கொடியுமேதுசொல்வாள்
பத்தினியுநானுனல் பார்த்தன்மகனுனல்
மாணிக்கத்தூணே வாருமென்றழைத்தாள்
மாணிக்கத்தூணும் வந்துவளைந்ததுகாண்
மாமியடையாளம் மங்கையரும்கட்டிவைத்து
மாலையிட்டுக்கொண்ட மணவாளனிவரானுல் [ணே
பெட்டியும்பேழைபோய் பொருந்துமென்றுள்பொற்றா
பேழையான தூணிலே போட்டடைத்தாளடையாளம்
ஆகாயவாணிகளும் அருந்துதிசாட்சிவைத்தாள்
பூமிதேவியம்மாள் பூவிளக்கேநீர்சாட்சி
அக்கினியேநீர்சாட்சி ஆதிசிவன்நீர்சாட்சி
மெய்யானசாட்சி மெல்லியரும்வைத்தபின்பு

**கலந்தாரி புருஷனென்றறிந்து பள்ளியறை கூட்டிப்போனது**

அஞ்சிநடுநடுங்கி அத்தைமகனென்றறிந்து
ஆறுதப்புநூறுபிழை அடியாள்நான்செய்ததெல்லாம்
கோடிதப்புநூறுபிழை கொற்றவரேகொண்டணையும்
என்றுஅடிபணிந்தாள் ஏந்திழையும்போது
போரஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறுகிருன்
ஆறுமறியாமல் ஆச்சிவரவிட்டாள்காண்
வாருமென்றுசொல்லி வானவிரல்கைபிடித்து

செம்பொன்கதவடைத்துச் சிக்கெனவேதாள்பூட்டி
சாளரவாசல்தனை தனித்தனியேதாள்பூட்டி
மங்கையரைக்கொண்டு மாளிகையினுள் நுழைந்தார்
மாணிக்கக்கட்டில்கள் மாமன்மார்போட்டதினுல்
அடுத்திருக்கும்பஞ்சணைகள் அருவையரேயாகாது
கொண்டுவந்தேன்பூமெத்தை கொம்பனையேகூடியிருக்க
பூமெத்தைபோட்டாராம் பொருந்திவிளையாட
மல்லிகைமெத்தையிலே மாதரைக்கொண்டுசென்று
மாதரைப்புல்கி மடிமேலேகுந்தவைத்து
ஆரந்திருத்தி அழகுபணித்தான்பூண்டு
கோவைத்திருத்திக் குழற்கோதிமங்கையற்கு
வாளிதிருத்தி மயிர்கோதிமங்கையற்கு
குப்பியில்சாந்தும் குழாயில்புனுகணிந்து
தேவியையலங்கரித்து செம்பொன்மணிமுடியான்
தாமுமணிந்துகொண்டு தாமந்தவாழ்மார்பன்
வாய்த்தயிலைச்சுருளும் மாதருக்குத்தான்கொடுத்தான்
பண்டுபலாதிகளும் பழங்கள்ரசக்கனியும்
மடித்தயிலைச்சுருளும் மாதருக்குத்தான்கொடுத்தான்
தாமுமிலையடைக்காய் தின்றுதனஞ்செயனுர்
மாதுமுகம்நோக்கி மன்னனெடுத்துரைப்பான்
மங்கையரேமீறி வளர்ந்துசமைந்திருக்க
திங்களொருக்கால் தேன்மொழியேமுழுகிருயோ
மங்கையரே நீருமிங்கே வாழாதிருந்ததெல்லாம்
அந்தப்பாவங்களெல்லாம் அம்மான்மார்தன்னுடே

புலந்திரனும் பெண்ஜாதியுங் கூடினது

வெற்றிலைதின்று விரும்பிவிளையாடி
தென்மதுரைராமருக்குச் சீதைவந்துவாய்த்ததுபோல்
கந்தருடன்வள்ளியம்மன் கைகலந்தபாவனைபோல்
சாரையொடுசர்ப்பம் சருவியிழைந்தாப்போல்
தேவியுடனே திருந்தடைக்காய்தின்றிருந்தார்
பூவணையைவிட்டுப் பொற்கிளியுந்தானிறங்கி
கவரிகொண்டுவீசலுமே கண்தெறிந்துகண்விழித்தான்
பலகாலுந்தன்னைப் பழகினவள்போலே
அருகாகவெண்கவரி ஆரணங்குவீசுகிருள்
இளவாழைத்தண்டெடுத்த இணைக்கைகள்நோகுதே

அநேகநெடுநேரம் அருந்திவிளையாடி
காரிழையாள்மாது கலந்தாரிநாயகியாள்
மல்லிகைமெத்தையை மயிலனையாள்விட்டிறங்கி
காலோடுகைகழுவி கனிவாயுங்கொப்பளித்து
வாயோடுபல்லுகளும் மதிமுகமுஞ்சுத்திசெய்து
மைத்துனரைப்பார்த்து மாதுயெடுத்துரைப்பாள்
தக்கப்புகழுடைய தருமர்பெயராலே
நானுமொருபொருளாய் நாயகமேவந்நீரோ
பாண்டியப்பெருமாளே பசியோடிருக்கிறீரோ
பசிக்கமுதுண்ணுமென்று பாலித்தாள்பைங்கொடியும்
பொற்றளிகையிட்டு பொற்கிளியுமுன்னேவைத்தாள்
பொற்றளிகைதானும் புசித்துமேஅப்போது

## இருவருக்கும் வாது

போரஞ்சாவீரனவன் புலந்திரனுங்கூறுகிறுர்
கோதையுடன்குந்தி கொற்றவனுரேதுசொல்வார்
மாதேயிளங்கொடியே மயிலனையேநீகேளாய்
சகுனிப்படுபாவி சண்டாளன்வாசலிலே
மாதைதுகிலுரிந்த மாபாவிவாசலிலே
கச்சாயந்தின்பதில்லை கன்னியிளமயிலே
வெற்றிமதயானை வீமராதுதெண்டாலே
நூலால்கடுந்திரளார் நூற்றொருவர்பூமுடியை
வெட்டிபலியிடுவோர் வீமராதுதெண்டாலே
பாரதமுடிந்துவுங்கள் பார்வேந்தர்மாண்டாக்கால்
ஆரணங்கேயுன்னுடைய அம்மான்மார்மாண்டாக்கால்
மாமியார்வீட்டிலே வரப்போகவிருக்கிறது
மாமியார்வீட்டிலே மருவுண்டிருக்கிறது
பாண்டவர்நாடுபெற்று நாமும்பயந்தெளிந்து
கொற்றவர்கள்நாடுபெற்று நாமும்குறைநீக்கி
மாலைமுடிபாண்டவர்கள் வந்தபிறகாக
கண்டார்குழலாள் மயிர்முடித்தபின்பாக
கச்சாயந்தின்று கலந்துறவாடுவதும்
என்றுரைக்கமன்னர் ஏந்திழைதானழுதாள்
தேவியழும்போது தேர்விஜயன்புத்திரனுர்
மாமன்மார்மாண்டாரென்று மங்கையேநீயழுதால்
என்-அம்மான்மார்செய்த அக்கிரமம்நீகேளாய்

உருவமதயானை உத்தமர்களைவரையும்
விருந்தருந்துமென்றுசொல்லி வேந்தரைத்தானழைத்து
வலுவிலேதானழைத்து மாயத்தால்சூதாடி
சகுனியரால்சூதாடி தருமபுரந்தான்தோற்று
எத்தோப்புந்தோற்று இருப்பிடமுந்தோற்று
யானைகளுந்தேருகளும் அணிமணிச்சிங்காசனமும்
முத்துமுடியு முருபவளச்செவ்வாயும்
சேரஅவர்தோற்று செம்பொன்மணிமுடியார்
நாடுமிகத்தோற்று நால்வரையுந்தோற்று
வித்தகனார்பாஞ்சாலன் பெற்றவிளங்கொடியை
கொற்றவர்பாண்டவர்கள் கொண்டகுலவிளக்கை
மாதாவையும்வைத்து மன்னவர்கள்தோற்றார்கள்
தாமக்குழலாளை தள்ளிவந்தானம்பலத்தில்
வேல்பொருதுங்கண்ணாளை வீதிகடக்கவைத்தான்
ஐவர்மனையாளை அங்காடிநடக்கவைத்தான்
அன்னநடையாளை அம்பலத்திலேற்றிவைத்தான்
சொல்லாதுஞ்சொல்லி துகிலுமுரியவைத்தான்
பாஞ்சாலன்புண்ணியத்தால் பாண்டவர்கள்புண்ணியத்
மாளாதேவந்தது மாதுதுகிலாடை [தால்
சற்றேநழுவியே உடைகுலைந்தாளாமாகில்
வெற்றிமதயானை வீமரதுதெண்டாலே
மாள்கிறதுஅன்றலவோ மாமன்மார் நூற்றொருவர்
சாகிறதுஅன்றலவோ சமர்த்துள்ள நூற்றொருவர்
மாமன்மார்பட்டாரென்று மங்கையரே நீயழுதாய்
ஏலக்குழலாளே எனக்குதுக்கம்வாராதோ
தம்மாணையென்றானே தருமமுடியழகன்
தையலவள்கேட்டு தரியாளேபூமியிலே
பூவணையைவிட்டிறங்கி புனக்கிளியுமப்போது
இதுவுமொருகாரியம்போல் இவ்வாணைவந்ததென்ன
ஆணைவிடுமென்று அடிவணங்கிதெண்டனிட்டாள்
வந்துவிழவொட்டாதே மன்னரெடுத்தணைத்து
விட்டேனேஆணையெல்லாம் வேல்பொருதுங்கண்ணு
ஆரமுலையாட்கு அடைக்காய்ச்சுருள்கொடுத்து [ளே
பொற்கொடியேயெந்தனுக்கு போகவிடைதாருமென்றார்
விடையென்றுகேட்கையிலே வேந்தன்மனையாட்டி
போகவேவந்தீரோ புதுமைகளைக்காட்டவந்தீர்

காவலழிக்கவந்தீர் கட்டழகாமன்னவரே
காரியங்கள்பார்ப்பதற்குக் காவலரேவந்தீரோ
மதுரையைநானறியேன் வைகைவளநாடறியேன்
வாழுமதுரையென்று வரிசைகளுநானறியேன்
சீரானமதுரையென்று சீமைகளுநானறியேன்
முத்துப்படுந்துறையும் முடியரசிபட்டணமும்
பட்டுப்படுந்துறையும் பட்டணமும்நானறியேன்
சத்திரஞ்சாலைகளுந் தாமரைப்பொய்கைகளும்
சித்திரச்சோலைகளுந் திருவாலவாயறியேன்
பெண்ணுய்ப்பிறந்து பெருமாள்முடிசூட்டி
அன்னம்போலாண்டாளே ஐம்பத்தாறுகாதம்
என்றுசொல்லக்கேட்டிருப்பேன் என்கணவா நானறி
பார்க்கவேநான்வருவேன் பாண்டிவளநாட்டை [யேன்
இருவரையுமொன்ருய் எடுக்காதோயிப்புரவி
வருகிறநானுமுங்கள் வைகைவளநாட்டுக்கு
நானும்வருகிறேன் நாயகரேகூடவென்ருள்
போரஞ்சாமன்னன் புலந்திருமேதுசொல்வார்
ஆரென்றெனையறியாய் அறிவையிளமயிலே
மதுரைதுரையாளுகிற மாதுமையாள்புத்திரற்கு
போரஞ்சாமன்னன் புலந்திரவீரியற்கு
ஆனந்தமார்பனுக்கு அடப்பம்பிடிக்கிறவன்
அந்தவடையாளஞ்சொல்லி அணைந்தேனேயிப்போது
மெய்யாய் நீயென்பிறகே மெல்லியரேபின்தொடர்ந்தால்
தகுமோடிதங்கையரே தாரார்கருங்குழலே
அவ்வசனங்கேட்டு அரிவையெடுத்துரைப்பாள்
மைத்துனரைதான்பார்த்து மாதுயெடுத்துரைப்பாள்
வுந்ததொருபூவணைக்கு மருவியுறவாடி
வந்தபொழுதே மணவாளா நீர்காணும்
நகைநகைத்தாரிந்திரரும் நாயகியாள்சொல்லுகையில்
போர்க்கஞ்சாவீரன் புலந்திரனுங்கூறுகிருன்
கற்கோட்டைமுத்திரையும் கர்னதுகாவல்களும்
இத்தனையுந்தான்கடந்து இங்கேவருவாருண்டோ
மதுரையைவிட்டுவந்த மணவாளன்நான்தாண்டி
காரிழையேயுன்னை களவாகக்கொண்டுசென்ருல்
தேடித்திரியாரோ சேனைகளத்தனையும்
மாலையிட்டுக்கொண்ட மணவாளன்நானல்லவோ

தாலிதரித்ததொரு தருமர்மகன்யானல்லவோ
களவாகக்கொண்டுசெல்ல காரியமேன்நாயகியை
நாளை-பாரதமுடித்து படுகளமுஞ்சென்றக்கால்
மங்கையரேஎன்னுடைய மாமன்மார்மாண்டாக்கால்
பாண்டவர்கள்நாடுபெற்று பதியமர்ந்தபிற்பாடு
அப்போதுதண்டிகையும் ஆளும்வரவிடுவேன்
உன்-மைந்தனும்நீயுமாய் வாருமென்றுதானுரைத்தார்
காரிழையாள்மாது கலந்தாரிதான்கேட்டு
எனக்கு-மைந்தருமுண்டாச்சோ மன்னர்பெருமானே
பிள்ளையுமுண்டாச்சோ பேர்பெரியமன்னவரே
போர்க்கஞ்சாவீரன் புலந்திரருமேதுசொல்வார்
உங்கள்குலம்போலேயல்ல ஓடமலர்க்கண்ணாளே
ஆண்மலடுபெண்மலடு அடங்கலுந்தான்மலடு
கண்ணிலான்பெற்றெடுத்த கபடரெல்லாந்தான்மலடு
எங்கள்குலங்கேளாய் இளங்கொடியேசொல்லுகிறேன்
தேர்விசையனர்ச்சுனனார் தெருவழியேவரும்போது
முன்னழகுகண்டு மொய்குழல்மார்சேர்ந்திடுவார்
அப்போதேகெற்பம் அடையுங்காணாரணங்கே
வந்ததொருபூவணையில் மருவிவிளையாட
எனக்கு-மைந்தனில்லையென்றால் வையங்களேசாதோ
பிள்ளையில்லையென்றால் பூதலத்தாரேசாரோ
பேடைமலர்க்கண்ணாள் பெறுவதுஆண்பிள்ளை
உன்-அம்மான்மார்பெயரை ஆரணங்கேவையாதே
எங்கள்ஐவரதுபெயரை ஆரணங்கேவையாதே
ஆணழகாஐவரிலே அருச்சுனனென்றழையும்
சித்திரவில்பேரனவன் சின்னஅருச்சுனனார்
அப்படியேயாகுதுகாண் ஆணழகாமன்னவனே
விடிந்துவருகுதடி மெல்லியிளங்குயிலே [றார்
பொற்கொடியேயெந்தனுக்குப் போகவிடைதாருமென்
விடைஎன்றுகேட்கையிலே வேல்பொருதுங்கண்ணாளும்
மைத்துனரைதான்பார்த்து மாதுயெடுத்துரைப்பாள்
தாதியர்களறியாமல் தார்வேந்தர்வந்தீரே
பிஞ்சுமணிமுடியாள் புத்திரரேயுண்டானால்
பொல்லாமசக்கையது பொருந்திற்றேயாமாகில்
அம்பலத்தாரெல்லாம் அறிந்துவிட்டாராமாகில்
என்னசொல்வேன்நானும் என்மாமன்நூற்றுவர்க்கும்

மாமியடையாளம் மன்னவரே நீர்கொடுத்தீர்
உம்முடையவடையாளம் வுத்தமரே தாருமென்ருள்
தருவீரென்றுமறித்தாள் தாமக்குழலாளும்
போரஞ்சாமன்னர் புலந்திரருந்தான்பார்த்து [டு
எண்பத்தெண்ணுயிரம்பேர் இளங்கொடிமார்தானுமுண்
கொம்பனைமார்தங்களுடன் கூடக்கொலுவிருப்பேன்
சல்லாபம்பேசியே சரசங்கள்செய்யவந்தால்
தங்கைதமக்கையென்பேன் தையலர்கள்யாவரையும்
பாண்டவர்கள்நாடுபெற்றுப் பதியமர்ந்தபிற்பாடு
வண்டணியுங்குழலாள் மயிர்முடித்தபிற்பாடு
உண்பதுந்தின்பதுவும் உன்மாளிகையிலேறுவதும்
அன்றுகாண்மாதரசே ஆரணங்கேயென்றுரைத்தார்
விடிந்துவருகிறது விஜயன்மருமகளே
போகவிடைதாருமென்ருர் புலந்திரனுரப்போது
விடையென்றுகேட்கையிலே வேல்புருவங்கண்ணுளும்
மாதமொருபயணம் வருவீரோமன்னவனே
சொல்லுமென்றுகேட்டாள் சொர்னப்பசுங்கிளியும்
ஒருநாளும்பொய்வார்த்தை உரையாதவுத்தமனும்
எங்கள்ஆச்சிக்குச்சொல்லி அறிக்கையிட்டுஅப்படியே
மாதமொருமுறைதான் வருகிறேன்தப்பாமல்
விடையென்றுகேட்கையிலே மெல்லிகருங்குழலாள்
பூவணையைவிட்டிறங்கிப் பொற்கொடியாள்நாயகமும்
வாய்த்தயிலைச்சுருளும் வர்னத்துவர்பாக்கும்
காவலனுர்வீரியர்க்கு கைநிறையஅள்ளியிட்டாள்
வேசியரல்லவோ கொடுப்பாறிலையமிதம்
ஏலக்கருங்குழலே இதுகளொன்றும்நானறியேன்
கொம்பனையேநீருங் குடியிருந்துகாத்திரோ
இந்நாட்டுவாசனைகள் ஏந்திழையேயல்லாது
இந்திரலோகத்தில் இருந்துவந்தவாசனைகள்
ஆகையினுலே அரசியரேநான்கொடுத்தேன்
சொற்படியேநீயெனக்குப் போகவிடைதாருமென்ருர்
தாரார்கருங்குழலாள் சரணமென்றடிபணிந்து
ஆருயிரவருக்கும் அவருடையதேவியற்கும்
பொன்னிமலைநாடாளும் போர்வேந்தர்ஐவருக்கும்
வையமுழுதாளுகின்ற மாமியார்தங்களுக்கும்
தெண்டனிட்டவிண்ணப்பஞ் செப்புவீரவர்களுக்கும்

## புலந்திரன் மதுரைக்குப் பயணப்பட்டது

என்றுசொல்லமாதுநல்லாள் இந்திரருமப்பொழுது
சிங்காதனத்தைவிட்டு திகழக்குதித்திறங்கி
மன்னவருமுன்னடக்க மாதரும்பின்னடக்க
ஆகாயவான்புரவி அலைதாரன்முன்புவர
வானப்புரவி வந்ததுமன்னவன்முன்
புரவியழகனவன் புகழ்வீரன்பேரழகன்
மதுரைமணவாளன் வந்தபடிவாராதே
என்றுமவள்கூறி இறங்கியேதெண்டனிட்டாள்
தேவியின்றன்முகத்தைத் திரும்பியவர்பார்த்து
அங்குபடிகாலைவைத்து ஆனந்தவாழ்மார்பன்
ஏறினாரப்போது இளவிஜயன்புத்திரனும்
உத்தமர்கள்புத்திரனும் உதாரிச்சுயேறினனே
ஏறினதுகண்டாளே இந்திரரைத்தான்காணாள்
மன்னவரைப்போகவிட்டு வாடிமனந்தளர்ந்தாள்
வாடிமனந்தளர்ந்து வர்னமுகம்வேறுபட்டு
பள்ளிகொள்ளுமண்டபத்தில் பைங்கிளியுந்தான்புகுந்து
கூடியிருந்தோமே குங்குமக்கட்டிலிலே
ஏறியிருந்தோமே எழில்பெரியமண்டபத்தில்
இன்னமொருமுறை இனிகாணப்போவதுண்டோ
என்று-செம்பொன்கதவடைத்து சிக்கெனவேதாள்பூட்[டி
பூவணைமேலே பொற்கொடியும்பள்ளிகொண்டாள்
தாமக்குழலாளும் தழுவணையிற்பள்ளிகொண்டாள்

## புலந்திரன் மதுரைக்கு வருகிறது

பொன்னிமணியழகன் புலந்திரனார்தன்புரவி
ஆகாயமாயெழும்பி அந்தரத்தில்தான்பறந்து
தாமரைச்சூழ்நாடுகளும் தருமாபுரங்கடந்து
வாழ்மதுரை நாட்டில் வந்தது அப்புரவி
சிங்காரத்தோப்பிலே சென்றது அப்புரவி
சந்தனவாழ்மரத்தில் தனஞ்செயரைத்தானிறக்கி
கொண்டுவந்துவிட்டது கொற்றவனார்தன்புரவி
செம்பொன்கடிவாளஞ் சிக்கெனவேதான்பிடித்து
வைகைக்கரையிலே மன்னவனார்வந்திறங்கி
ஆடைகளைந்து ஆபரணந்தான்களைந்து
நன்றாய்ப்பணிதிகளை நாயகருந்தான்கழட்டி

பச்சைவடங்களைந்து பாண்டியப்பெருமானும்
கட்டழகியிதழுங் கண்டானேபுடவையிலே
இனிகாணவகையிலேயே கட்டழகிசீர்வடிவை
பார்க்கவகையிலேயே பாவையழகியரை
சாந்திக்கழுத்தியரை சந்தனப்பூமேனியரை
குங்குமமொத்ததொரு கொம்பேரிடையாளை
அவள்-கட்டாணிவார்த்தைகளும் கைநீட்டிபேசுவதும்
பார்க்கவகையிலேயே பாவையழகியரை
இன்னமொருகாலம் இனிகாணப்போறேனே
எத்தனைநாள்செல்லுமோ இளங்கொடியைநான்காண
மாதரையான்பிரிய வைத்தீர்மகாதேவா
தோகையரைநான்பிரிய கொடுமைவைத்தீர்ஈஷ்பரரே
இவளைப்பிரியாதிருக்க என்னகுறைசெய்தேனே
தேவியரைத்தானினைந்து சிந்தைமிகக்கலங்கி
ஆனந்தவாழ்மார்பன் ஆழிச்சுனையிரங்கி
கொற்றவர்கள்கோமான் குளித்துக்கரையேறி
ஈரங்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
துவட்டங்கொண்டு துவட்டியநந்தஇந்திரனும்
அனந்தம்பணிபூண்டு ஆனந்தவாழ்மார்பன்
நாணியப்பணிதிகளைப் நாயகருந்தான்பூட்டி
தென்மதுரைநாட்டான் திருநீற்றுக்காப்பணிந்து
சிந்தித்துநின்று சிவனையடிபணிந்து
சந்தனங்கொண்டணிந்து தங்கத்திருமேனியெல்லாம்
குங்குமங்கொண்டணிந்து கொற்றவனுந்தான்திமிறி
மாணிக்கப்பச்சைவடம் மன்னவன்வரிந்துடுத்தி
மாதாவின்பாதத்தை வணங்கவேவேண்டுமென்று

## புலந்திரன் தாயாரிடம் வந்து சேர்ந்தது

சிங்காரத்தோட்டம்விட்டு தென்னரசுநாட்டானும்
சித்திரவீதிகளும் தெருவும்பலகடந்து
மாதாகொலுவிருக்கு மண்டபத்தின்முன்னேவந்து
மாதாவின்கொலுவை வலமாகச்சுற்றிவந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டு
மாணிக்கப்பொற்பீடம் மன்னவனும்வீற்றிருந்தான்
அமர்ந்தார்கொலுவி லல்லித்திருமகனும்
அப்போ-சோலைமலருடைய சொக்கனார்கோவிலிலே

என்னுயிர்ச்சின்ன மெங்குமேதான்முழங்க
நாகசுரம்பதினெட்டு நவுரிகளும்நின்றூத
ஊதினசின்னங்க ளுத்தமியாள்தொனிகேட்டு
வெகுநேரமாச்சுதே வேந்தர்வரக்காணேமே
கள்ளரறிந்தாரோ காவலர்கள்கண்டாரோ
மாலைமுடியானை வதைசெய்தாராமாகில்
நான்-மாளும்படியொழிய மண்ணிலிருப்பதில்லை [வேன்
பஞ்சவர்க்கென்னசொல்வேன் பாஞ்சாலிக்கென்னசொல்
அங்கவர்க்கென்னசொல்வே னர்ச்சுனர்க்கேதுசொல்வே
சிந்தையிலேஎண்ணி செங்கண்ணுள்முத்துதிர்த்தாள்[ன்

## புலந்திரனைத் தாயார் கண்டது

தட்சணமேகெவுளியது சாற்றிற்றுதேன்மொழிக்கு
பூவணையைவிட்டிறங்கிப் பொன்மதுரை நாட்டாளும்
செம்பொற்கதவைத் திறந்தபொற்கொடியும்
மைந்தன்கொலுவிருக்கு மண்டபத்திற்போய்புகுந்தாள்
மைந்தன்புலந்திரனை வளநாடிதான்பார்த்தாள்
அரைத்திருந்தசந்தனத்தை அள்ளியறைந்ததுபோல்
வற்றிக்கிடந்ததொரு வருள்பெரியகாவேரி
முட்டப்பெருகிக் கரைபுரண்டுவந்ததுபோல்
பூரித்திருதோளும் பொன்னுபரணமின்ன
சந்தோஷங்கொண்டு தையல்வருகையிலே
மாதாவரவுகண்டு மன்னர்புலந்திரனும்
சிங்காதனத்தைவிட்டு திகழக்குதித்திறங்கி
இந்திரருமப்போது எதிரேநடந்துவந்து
பூவும்புதுமலரும் பொன்னருகுயட்சதையும்
மாதாவின்பாதம் மலர்தூவிதெண்டனிட்டார்
வந்துபணிந்தவரை வாழ்த்தியெடுத்தணைத்து
வாழ்வீர்வளந்திடுவீர் மண்ணூழிகாலமட்டும்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போல் கலங்காதரசாள்வீர்
என்னைப்பெறுவீ ரெதிர்த்தார்முடிபெறுவீர்
பிள்ளைப்பெறுவீர் பெருமாள்பதம்பெருவீர்
அத்திபுரமாள அச்சுதனைப்பெற்றிடுவீர்
மதுரைநகராள்வதற்கு மைந்தரைப்பெற்றிடுவீர்
காரிழையாள்மாது கலந்தாரிகோட்டையிலே

மைந்தரைப்பெறுவதற்கு மனங்குளிரவாழ்த்தினள்
ஆசனம்போட்டார்கள் அங்கிருந்ததாதியர்கள்
இட்டதொருஆசனத்தி லிந்திரரும்வீற்றிருந்தார்
மைந்தர்புலந்திரரை வளநாடிதான்பார்த்து
உச்சியிலேதானிருந்து உள்ளங்கால்பரியந்தம்
பார்த்தாள்பலகாலம் பார்த்திபன்தன்மகனை
போனபுதுமைகளைப் புகழ்வீரர்காணுமே
தேவிதன்னரண்மனைக்கு சென்றமொழியுமில்லை
குங்குமங்கதம்பம் குலைந்துமிருக்கவில்லை
போய்வந்தேனென்று பொய்யுரைத்தீர்மன்னவனே
எங்கேயிருந்துவந்தீர் இளவயதுகோமானே
எத்தூரஞ்சென்று எவ்விடத்தில்பள்ளிகொண்டீர்
என்னஅவள்கேட்க எடுத்துரைப்பாரிந்திரனர்
போய்வந்தேனென்னுச்சி பொய்கைதனில்நீராடி
புட்பமலரெடுத்து போற்றிபணியவந்தேன்
உள்ளதைதானுரைத்தான் உத்தமசிகாமணியும்
மலர்குழலாள்மாது மயிலனையாளேதுரைப்பாள்
நீர்போனபுதுமைகளும் பொற்கொடியைகண்டதுவும்
ஆனந்தவாழ்மார்பன் அரசாளுந்தன்மைகளும்
வாசற்புதுமைகளும் வைத்திருக்குங்காவல்களும்
எதிரொருவரில்லாம லிராச்சியத்தையாள்கிறதும்
உத்தமர்கள்பாண்டவரை ஓட்டியரசாள்கிறதும்
கட்டழகிதம்முடனே கைகலந்தபாவனைபோல்
ஒன்றுமொழியாம லுத்தமனேசொல்லுமென்றுள்
என்னாணைதப்பி எனக்கரியச்சொல்லுமென்றுள்
ஆனலொளியாமல் ஆச்சியரேசொல்லுகிறேன்
ஆணையிடுமென்று ஆச்சியரைத்தெண்டனிட்டான்
ஆணையிடுவதில்லை அருளாளாசொல்லுமென்றுள்
தென்னடியாதீனத்தில் சிறுவனும்வீற்றிருந்து
மாதாவின்முன்னக மன்னவனுமேதுசொல்வான் [ம்
எங்களை-ஆருயிரவரென்னு மணிதிரளாம்பாண்டியற்கு
பொன்னின்மலைநாடாளும் போரெழுதியைவருக்கும்
வையமுழுதாளுகின்ற மாமியார்தன்தனக்கும்
தெண்டனிட்டவிண்ணப்பம் தெரிவிப்பீர்மன்னவனே
என்று-தென்றுற்கருங்குழலாள் தெரிவித்தாள்யாவருக்
அந்த-மாதுவிடைகொடுக்க வந்தேன்காணுச்சியரே [கும்

ஆகாயவான்புரவி யலர்தாளாயெங்கேயென்ருள்
பொன்னுமணியழகன் புலந்திரனுமேதுசொல்வான்
பூங்காவனந்தனிலே புரவியைவிட்டேனென்ருன்.
அரசாளும்நாயகியா ளல்லியருந்தான்கேட்டு
மாதுகருங்குழலாள் மலர்காவில்போய்புகுந்து
வான்புரவிகைபிடித்து வைகைவளநாட்டியரும்
கடிவாளங்கைபிடித்துக் கட்டழகியல்லியம்மாள்
தேவேந்திரனுகத் தெரிசித்துபெண்மயிலும்
நீ-வரவிட்டகாரியங்கள் நிறைவேற்றித்திரிந்ததுகாண்
புரவிவருகுதுகாண் புண்ணியரேயென்றுசொல்லி
கண்டுகொள்ளுமென்றுசொல்லி கயற்கண்ணுள்தெண்ட
ஆகாயமாயெழும்பி பறந்ததுகாண்புரவி [னிட்டாள்
வணங்கியெழுந்திருந்து வண்டார்குழலாளும்
மைந்தனிருக்கிறதோர் மண்டபத்திற்போய்புகுந்து
பொற்றளிகைமிட்டுப் பொற்கொடியுமைந்தனுமாய்
இளைப்பாருமண்டபத்தில் இருந்தாரிருவருமாய்
ஆணையெல்லாம்விட்டேன்காண் ஆனந்தவாழ்மார்பா
என்றுமிகக்குளிர்ந்து இருந்தார்கள்மதுரையிலே

## கலந்தாரியை தாதிமார் கண்டது

அப்படியாமிருந்த ஆனதொருநாளையிலே
மற்றுளுனானபின்பு மாதுகருங்குழலாள்
கருநீலப்பூங்குழலாள் கலந்தாரிநாயகமும்
தாமக்கருங்குழலாள் தன்னுடையதாதியரை
பேர்சொல்லித்தானழைத்தாள்பேடைமலர்க்கண்ணுளும்
அசந்துநித்திரைபோய்விட்டா ளவர்மருமகளும்
அத்தைமகன்மேல்நினைவாய் அசந்துநித்திரைபோகிரு
அந்நேரந்தாதியர்கள் அலண்டுஎழுந்திருந்தார் [ளாம்
தங்களுக்குள்ளாகத் தையலர்விசாரமிட்டு
முந்தியெழுந்திருந்து முருகுழல்மாரோடிவந்தாள்
நம்மையெல்லாந்தட்டி நாயகியாளெழுப்பிடுவாள்
மாதுக்குநித்திரைகள் வந்தவாறுஎவ்வாறு
என்றுமனந்தளர்ந்து ஏந்திழைமார்விசாரமிட்டு
செம்பொன்கதவருகில் தேன்மொழிமார்வந்துநின்று
வாளேந்திக்கைதனிலே மயிலணைமார்யாவர்களும்
பாவையருகில்வந்து பள்ளியறைபோய்புகுந்து

ஏறிட்டுப்பார்த்தார்க ளிளங்கொடியாள்சீர்வடிவை
ஆடையவிழ்ந்தது அறியாளாம்பெண்கொடியும்
ஆபரணங்களைந்ததுவும் ஆரணங்குநானறியேன்
உற்றுற்றுப்பார்த்தார்கள் ஒளிவுடையாள்சீர்வடிவை
சந்தனங்கள்பூசிச் சரிந்துயிருந்ததுகாண்
வகைவகையாய்பூச்சரங்கள் வந்தவாறுஎவ்வாறு
இருவர்பள்ளிகொண்டதுபோ லிருக்குதுகாண்மாதர்கா
இறைந்துமிருக்குதுகா ணெங்கெங்கும்பூச்சரங்கள் [ள்
அடைக்காய்களித்தனை நா ளரைப்படிகமாயிருக்கும்
முழுபடிக்காய் நிறைந்து முழுதலைக்கும்வழிந்தோட
வண்டார்குழலாட்கு வாசனைகள்மிஞ்சுதுகாண்
இந்தநாட்டுவாசனைக ளேந்திழையேயல்லாது
இந்திரலோகத்திற்கு எட்டுதேவாசனைகள்
மன்னர்திருமகனுர் வந்தாரோவிசையுடனே
அரசாளுநாயகியா ளல்லிவரவிட்டாளோ
ஆகாயந்தானிருந்து அந்தரமாய்குதித்தாரோ
கற்கோடிமுத்திரையுங் கர்னனதுகாவலிலே
எப்படிக்குவந்தாரோ என்றுவிசாரமிட்டு
தாமக்குழலாளைத் தட்டியெழுப்பவென்றுல்
இந்திரன்மேற்சிந்தையினு லெழுந்திருக்கப்போவதில்லை
இதுவேயல்லாமல் யாதொன்றுந்தானறியாள்
தாதியர்களெல்லோரும் தையலரைப்பார்த்திருந்தார்
குளிர்சாந்துசந்தனமுங் குளிர்கவரியிற்றெளித்து
ஈரெட்டுவெண்கவரி யிசைந்தவெண்சாமரங்கள்
காரிழைமார்தன்காதல் கவரிபரிமாறினுர்கள்
மெல்லிநல்லாள்மதிமுகத்தில் வெண்கவரிவீசலுமே
கவரிகொண்டுவீசலுமே கண்தெளிந்துகண்விழித்தாள்
சுற்றிநிறைந்திருக்கும் தோழிமார்தாதியர்கள்
அத்தனைபேரையு மரிவையவள்கண்காட்ட
மெல்லியர்களெல்லாம் வெளியேமறைந்தார்கள்
தாய்போல்வளர்த்தெடுத்த தாதிதனித்திருந்தாள்
தனித்திருந்ததாதியவள் தனியாகவந்துநின்று
மாதுதனையெடுத்து மடிமேலேதான்வளர்த்தி
ஆரங்கள்தான்திருத்தி யழகுபணிதான்பூட்டி
கோவைகள்தான்திருத்தி குழல்கோதிகொம்பனைக்கு
மாளிகைதான்திருத்தி மயிற்கோதிகொம்பனைக்கு

மெத்தெனவேகோபமதாய் மெல்லியரைத்தான்பார்த்து
கண்கள்சிவப்புடனே கன்னியவளேதுசொல்வாள்
வர்னப்பசுங்கிளியே வாடாதசெண்பகமே
வாடியிருப்பதென்ன மாதுதிருமுகங்கள்
சீரியிருக்குதுகாண் செண்பகப்பூமேனியெல்லாம்
அலர்ந்தசெந்தாமரைப்போ லரிவையரேயுன்முகங்கள்
மலர்ந்திருக்குநெடுநாள் வாடியிருக்கக்காரணமேன்
குங்குமம்பூசிக் குலைந்துமிருக்குதுகாண்
வகைவகையாய்ப்பூச்சரங்கள் வந்தவாரெவ்வாறு
பங்கிட்டுக்கொள்ளுவோம் பாங்கிமாரெல்லவரும்
மெத்தநல்கியே மெல்லியிருப்பதென்ன
அடைக்காய்கள்தின்றல் அரைபடிக்கமாயிருக்கும்
மேல்வாய்வகுத்துங்காண் மெல்லியரேதம்பலங்கள்
வண்டார்கருங்குழலே வாசனைகள்மிஞ்சுகுது
இந்நாட்டுவாசனைக ளிளங்கொடியேவல்லவிது
வானவர்லோகத்தில் வந்ததொருவாசனைகள்
காரிழையுன்னைக் கலியாணம்பண் ணுகையில்
தாலியுடன்மாலையுஞ் சந்தனமுங்குங்குமமும்
மந்தாரக்கூறையும் மைகளுடன்சிவப்பும்
வரவிட்டார்கண்டீரோ வண்டார்குழலாளே
அந்தப்பரிகளம் ஆரணங்கேவந்ததுகாண்
மன்னர்திருமகனர் வந்தாரோவுறவாக
அரசாளும்நாயகியா ளல்லிவிவேகியல்லோ
பூதம்பணிசெய்யும் பொற்கொடியாள்வாசலிலே
மேகத்திலேற்றி மெல்லவரவிட்டாளோ
ஆருமறியாம லருச்சுனனுர்புத்திரரும்
மாலைமுடியாளே மைத்துனனும்வந்தாரோ
கட்டார்கருங்குழலாள் கலந்தாரிதான்கேட்டு
கண்கள்சிவந்து காந்தாளந்தானுகி
அவ்வலரிகண்கள்ரெண்டும் செவ்வலரிபூத்ததுபோல்
தாமக்கருங்குழலாள் தாதிமுகம்பார்த்து

**கலந்தாரி தாதிகளுக்குச் சொல்லுதல்**

ஏண்டிநீதாதிகளே யிடும்புகளைப்பேசவந்தாய்
மதுரை-அரசாளும்பூமுடியார் அவரங்கேயிருக்கையிலே
என்-மைத்துனனுரிங்கே வரும்வாறுமெவ்வாறு

கற்கோட்டைமுத்திரையுங் கர்னரதுகாவல்களும்
ஆருனையுந்தான்கடந்து இவ்விடம்வருவதுண்டோ
ஐயாயிரந்தோழி அருகிலிருந்தீர்கள்
காரிழையாள்தாதிகளே கண்கெட்டுப்போனீரோ
இச்சிறையில்காக்க எல்லோருஞ்சொல்லீரோ
வன்சிறையில்காக்கவைத்தால் மாதரெல்லோருஞ்சொல் [லீரோ
தாதியர்க்கெளிதாகத் தையலரும்நானிருந்தேன்
வேண்டேனினிச்சென்மம் வெறுத்தேன்காண்மங்கைய [ரே
மாண்டாலுஞ்சேதமில்லை வண்டார்குழலியரே
ஆரவிளமுலையா ளறைந்துகொண்டுதானழுதாள்
தாமக்கருங்குழலை தாதியருந்தோழியரும்
செங்கமலநாயகியாள் சேரவேயோடிவந்து
காசிவளகர்னன் கட்டழகிதான்கேட்டால்
ஆக்கினைகள்வந்துவிடு மரிவையிளமயிலே
அறியாமற்சொன்னே மரசேபொருத்தருள்வீர்
மாதின்திருவடிக்கே வந்துமிகத்தெண்டனிட்டாள்
தாதியவள்தணிக்கத் தனித்திருந்தாள்தையலரும்
கொம்பேரிடையாளுங் கோபந்தணிந்தபின்பு
போனகத்தாதியரும் பொற்கொடியுமோடிவந்து
போசனங்களாச்சுதென்று பொற்கொடியைத்தானழைத் [தாள்
பூவணையைவிட்டிறங்கிப் புட்பமலரணையாள்
வாசமுமீந்து மலர்குழலாள்பூவுதரி
பாவையருமப்போது பற்கொம்புதானெடுத்து
பல்லைவிளக்கிப் பவளவாய்கொப்பளித்து
ஸ்நானங்கள்செய்து சந்திசெபந்தான்முடித்து
மாணிக்கமண்டபத்தில் மங்கையரும்வீற்றிருந்தாள்
தாதியர்களெல்லாந் தையலர்முன்வந்துநின்று
பொன்னுந்துகிலொதுக்கிப் பின்புறமாய்வந்துநின்று
மாணிக்கச்சீப்பாலே வாரிமயிர்கொண்டையிட்டு
பரிமளபுட்பங்கள் பைங்கிளியாள்பூக்குழலில்
மருக்கொழுந்துமாலைகள் வைத்துமுடித்தார்கள்
புட்பமலராட்குப் பூமுடித்தானபின்பு
புலிமுகமுக்காலில்வைத்துப் பொற்றளிகைதானும்வைத் [து
மற்றுமுள்ளகாய்கறிகள் வானத்தளிகைவைத்தாள்
பொரித்தபொரிக்கறியும் பொன்போல்சிறுபருப்பும்
பத்துவகைக்கறியும் பதினெட்டுப்பச்சடியும்

அன்பானபச்சடியும் அடைவாய்பரிமாரி
புத்துருக்குநெய்யும் புதுமையுடன்ருன்வார்த்து
பொன்போன்றசெம்பிலே வெந்நீருந்தான்வார்த்து
அந்தவடிசல் அமுதுண்டபிற்பாடு
முடிபூவுஞ்சந்தனமும் மிகவாரிவெள்ளிலையும்
அடைக்காயுந்தின்று ஆனந்தவாழ்மாரி
பூசித்துத்தானிருந்தாள் புருஷனை தினந்தோறும்

கலந்தாரிக்கு கெற்பமுண்டானது

பொன்னுமணியழகர் புலந்திரனுர்தேவியரும்
மூனவீரர்தேவியற்கு மூன்றுதினங்களாச்சுது
வண்டாற்குழலாட்கு மைந்தனுய்த்தோன்றிற்று
இட்டப்படுக்கையிலே எழுந்திருக்கத்தள்ளாது
உற்றுப்பார்த்து ஒருபோதுவுண்டிருப்பாள்
தின்னுளிலையடக்காய் தேனுர்குழலாளும்
அம்மா நீராடாள் அங்குழல்பந்தாடாள்
பந்துபிடித்தறியாள் பள்ளாங்குழியாடாள்
காரிழையாள்மாதுக்கு கழுத்துகள்நேர்ந்ததுகாண்
குழிசாலுகள்போல குலவயிறுபெருத்து
திருவயிறுமேனியுஞ் சீர்பெறவேதான்செழிக்க

கலந்தாரி கெற்பமடைந்ததைத் தாதிமார் காண்கிறது

தாய்போலேவளர்த்தெடுத்த தாதியவள்பார்த்து
மாதுமுகம்நோக்கி மங்கையெடுத்துரைப்பாள்
வண்டார்குழலியரே மங்கையராய்த்தோற்றுவதேன்
மாலைக்குழலாளே மைந்தன்வந்தவாரேது
கழுத்தடிகள்நேர்ந்து கன்னிமுகம்வேறுபட்டு
இளைப்புந்தளர்ப்புமாக ஏந்திழையேசொல்லுவதேன்
மன்னன்திருமகனுர் வந்தாரோவுறவுடனே
அரசாளும்பூமுடியா ளல்லிவரவிட்டாளோ
மெத்தவறிவுடையாள் மெல்லிவரவிட்டாளோ
மாலையணிமார்பன் மைத்துனனுர்வந்தாரோ
பூங்குழலேயுன்னைத்தழுவி புல்கியவர்போனுரோ

கலந்தாரி தாதிகளைத் தூறுகிறது

வேறுபட்டமாதரசே மெல்லியரேயுரையுமென்ருள்
அவ்வசனங்கேட்டு ஆரவிளமுலையாள்

ஆரு தகோபமது ஆற்றமுடிபோகாமல்
இத்தனைஇடும்புகளை என்னுடனேசொல்லவந்தீர்
முன்னொருவம்புகளை மொய்குழலேசொன்னீர்கள்
இன்னம்இடும்புகளை என்னுடன்சொல்லுகிறீர்
காசிவளபூமுடியார் கர்னருக்கறிக்கையிட்டு
ஆக்கினைகள்செய்யாமல் ஆரணங்கேநானிருந்தேன்
ஒருவரறிந்தால் உலகமெல்லாந்தானறியும்
இருவரறிந்தால் எங்கெங்குந்தானறியும்
இந்நாள்வரையிலும் இருந்துவளர்ந்தோமே
கூடியிருந்தீரே கொம்பனைமாரெல்லோரும்
இதுநடுவில்வந்து எவரழித்தாரெந்தனையும்
கொல்லவினைசெய்கிறாய் கொம்பேரிடையாளே
இந்தச்சிறைவைத்ததினால் எல்லோருஞ்சொல்வீரோ
தாதியற்குமேளிதமாய்த் தையலரே நானுனேன்
என்றுமிகத்துக்கித்து ஏந்திழையாள்சொல்லுகையில்
தாதியர்களெல்லோரும் தையலண்டையோடிவந்து
சுத்திநிற்கும்பெண்களுக்குஞ் சூழ்ந்திருக்குந்தாதிகட்கு
செங்கமலநாயகியாள் சேரவேயோடிவந்து
காசினியோர்புகழுங் கர்னர்வரும்வேளையிலே
ஆரவிளமுலையாள் அழுதகுரல்கேட்டால்
நாக்கோடுமூக்கறுப்பார் நல்லசெவிதானறுப்பார்
என்று-மாதுதிருவடிக்கு வந்திறங்கிதெண்டனிட்டு
தாமக்கருங்குழலாள் தாதியருங்கூறுவாள்
மாதா நீரொலித்தாலும் மைந்தனொளித்திடுமோ
சூலொளிக்கப்போகாது துன்னுங்கருங்குழலே
இன்னமொருதிங்கள் ஏந்திழையேசென்றாலும்
தானேயறிகின்றீர் தங்கக்குழலாளே [வீர்
நாங்கள்-அறியாமற்சொன்னோமே அரசேபொறுத்தருள்
என்று-மாதுதிருவடிக்கு வந்திறங்கிதெண்டனிட்டாள்
தாதியவள்தணித்திருந்தால்தையலரும்
காசிலிவர்னர் கர்னரதிகாரன்
வேட்டைக்குப்போய் மீண்டுவருகையிலே

### கர்னன் வேட்டைக்குப் போய்வருவது

விடாய்த்துவொருமண்டபத்தை வீற்றிருக்ககர்னரவர்
சிந்துகவிகேட்டிருந்தார் சீர்கருணவீரியரும்

அந்தக்கவிதனிலே அல்லியம்மாள் தூதனவன்
ஓலைகொண்டுபோகிறான் உத்தமியாள் தூதுவனும்
ஆனந்தமாகவே ஆச்சாரச்சாவடியில்
மேளங்கள்தாளங்கள் விருதுபலமுழங்க
அவன்வரும்வழிதனிலே அதிகர்னர்வீற்றிருந்தார்

### அல்லியுடைய தூதன் கர்னரைக் காண்கிறது

வந்தங்கே நின்று மன்னவனைப்பார்த்து
ஆரோதெரியாது ஆதிச்சந்திரன்போல்
ஆரென்றுபார்ப்போமென்று அருகினில்வந்துநின்று
கர்னரென்றுதானறிந்து கையெடுத்துதெண்டனிட்டான்
அடிபணிந்த தூதுவனை யாரென்றுதான்கேட்க
ஆருயிரவரென்னும் அதிவீரபாண்டியர்கள்
அணிமதுரைநாட்டுக்கு அரசுமன்னன் தூதுவன்யான்
பொன்னுமணியழகன் புலந்திரற்கு தூதுவன்யான்

### கர்னர் கலந்தாரியைக் கேட்டது

காசிலிவர்னர் கர்னரவர்தான்பார்த்து
மாதுமையாள்தானளிக்க மன்னவருமேதுரைப்பார்
நாணமறிந்தாயோ நாமக்குலவிளக்கே
வெட்கமறியாயோ வேல்புருவங்கண்ணாளே
நாணமும்வெட்கமும் நாயகமேகற்றாயோ
நீயேயறிந்தாயோ நேரிழையேபுத்திகளை
காரிழையேயுந்தனுக்கு கற்பித்தார்யாரோதான்
உன்-மைத்துனனார்மீறி வளர்ந்துயிருக்கிறார்
நாடாளக்கற்றாலும் நாமகுலவிளக்கு
செம்பொன்மணிமுடியான் செங்கோல்பிடித்தானும்
என்னைப்போல்மீறி இந்திரனும்வளர்ந்தானும்
வாராதிருந்தானே வளவிலொருபயணம்
வண்டார்குழலாளை வாழாப்பெண்ணாக்கிவைத்தான்
ஆனந்தமார்பனை ஆளைவிட்டுவரவழைத்து
விஜயன்றிருமகனை விலங்குகள்போடவைப்பேன்
என்றுமிவருரைக்க ஏந்திழையாள்தான்பேசாள்
ஏறிட்டுப்பார்த்தாரா மிந்திரனார்தேவியரை
காலைத்தொடங்கியே கரியகுழலளவாய்
பார்த்தார்பலகாலும் பார்த்தன்மருமகளை

தருமமுடியழகன் தாதியரைத்தானழைத்து
இவள்-மையெழுதுங்கண்ணாள் மலர்சொரியுஞ்சொல்வா
சந்திரவாயுதம்போல் தளும்புகிறதிருமுகங்கள் [யாள்
சிறியிருப்பதென்ன செண்பகப்பூமேனியெல்லாம்
அலர்தாமரைப்போல் ஆரணங்குதிருமுகங்கள்
மலர்ந்ததிருமுகங்கள் வாடியிருப்பதென்ன
தாமக்குழல்மாரே தாதிகளேசொல்லுமென்றாள்
ஆடைகுறைவாச்சோ ஐவர்மருமகட்கு
ஆரமுலையாட்கு ஆபரணங்குறைச்சலுண்டோ
எதனாலேவாடினாள் எங்கள்குலவிளக்கு
மதுரைக்குப்போக மங்கையரும் நினைத்தாளோ
மைத்துனரைத்தானும் மாது நினைத்ததுண்டோ
வண்டணியுங்குழலாள் வாடியிருப்பதென்ன
இதுவென்னகருமம் எனக்கரியகூறுமென்றார்
தாமக்கருங்குழலாள் தாதியவளேதுசொல்வாள்
வேறொன்றுமில்லையையா வேந்தர்பெருமாளே
தாரார்குழலுடையாள் தலைநோகுதென்றுசொல்லி
உண்ணாதிருந்தாள்காண் ஒன்றிரண்டுநாளாச்சே
கர்னரதுகேட்டு காரிழையேதாதிகளா
எந்தனுக்குசொல்லாமல் இருந்தகருமமென்ன [பேன்
உங்களை-சிறையிலேவைத்திடுவேன் சிர்பாதமேற்றிவைப்
தலையைச்சிறைத்துநான் தாள்விலங்குபோட்டுவைப்பே
என்று-ஏறிட்டுப்பார்த்தாராம் இந்திரனார்தேவியரை [ன்
காலைதொடங்கியே கரியகுழலவளாய்
பார்த்தார்பலகாலும் பார்த்தன்மருமகளை
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியரைத்தானழைத்து
வண்டார்குழலாட்கு மைந்தராய்த்தோற்றுதுகாண்
பேடைமலர்கண்ணாட்கு புத்திரராய்த்தோற்றுதுகாண்
மன்னர்திருமகனும் வந்தானோயிவ்விடத்தில்
வாள்விசயன்புத்திரனும் வந்தானோவுறவாக
கற்கோட்டைமுத்திரையுங் காவலர்கள்விழித்திருக்க
ஆகாயமார்க்கத்திலே அந்தரமாய்வந்தாரோ
மாதுமணவாளன் வந்தாரோசொல்லுமென்று
கர்னரவர்கேட்கையிலே காரிழைமார்கூறுவார்
நூலால்கடுந்திரளார் நூற்றுவர்க்கும்பிள்ளையில்லை

மகாராஜருக்கு மைந்தன்முதலில்லையே
ஆரை நீர்கண்டீர் அடையாளம்நீர்பார்த்தீர்

### கர்னன் தாதிகளை கேட்பது

நீ-கண்டகுறிப்பை கருத்துடனேசொல்லுமென்றான்
காசிலிவர்னர் கர்னரவரே துசொல்வார்
வண்டார்குழலாட்கு மைந்தனேதப்பாது
மாதுமணவாளன் வந்தகுறிகாணேமே
மதுரை துரைமகனும் வர்த்தமில்லையென்று
எந்திழையே நீங்கள் என்மேலே ஆணையிட்டு
தாமக்கருங்குழல்மார் தாதியருமூப்பிகளும்
சேரவேயோடிவந்து சேயிழைமாரெல்லோரும்
காசிலிவர்னர் கர்னனேயும்மாணை
உம்மாலேயாணைபடி ஒருகுறிநாமறியோம்

### கர்னர் தாதிகள்மேற் கோபித்தது

காசிலிவர்னர் கர்னருங்கண்சிவந்து
அவளுக்குஒற்றைப்பணிதியிட்டு வுத்தரியப்பட்டுடுத்தி
ஆபரணமிட்டு அழகாகப்பட்டுடுத்தி
வைத்தேனேயுங்களை மங்கையற்குகாவலாய்
சொல்லுதற்குவைத்தேனே தோகையிளங்கொடியே
ஆடைகளையுமென்றார் ஆபரணம்வாங்குமென்றார்
திரளான ஆபரணஞ் சேரவேகழட்டுமென்றார்
பாவாடையோடே பைங்கொடிமார் நீங்களுங்கள்
மாணிக்கப்பேழையிலே வைத்தாரேவுங்களை தான்
ஆக்கினைகளில்லையே அலைதாரன்பட்டணத்தில்
வாசல்பேரத்தனையும் வகையுறவேவெட்டிடுவேன்
சிந்துநாடாளுகிற தேத்தரசன்மன்னவனை

### கர்னர் தூதனைக்கண்டு புலந்திரன் செய்தி கேட்பது

காசிநகர்கர்னர் கர்னருந்தான்வாழ்த்தி
தூதன்றனைப்பார்த்து சொல்லுவாரொருவசனம்
என்னைப்போல்மீறியே இந்திரனும்வளர்ந்தானே
நாடாளக்கற்றானே நாமக்குலவிளக்கு
செம்பொன்மணிமுடியான் செங்கோல்பிடித்தானே
இப்படிக்குமீறியே இந்திரனும்வளர்ந்திருக்க

வண்டார்குழலாளும் வளர்ந்திருந்துசமைந்திருக்க
திங்களொருமுறைதான் தேன்மொழியாள்முழுகுகிருள்
பேடைமயிற்கண்ணுள் பிள்ளைபெருங்காலம்
காவலிலேவைத்துயான் காக்கிறேன்கண்மணியே
மாலைமுடியாளும் வரவிட்டாலாகாதோ

### கர்னருக்குத் தூதன் சொல்வது

என்றுரைக்கக்கர்னர் எடுத்துரைப்பான் தூதனவன்
மதுரையறுகாதம் மன்னவனுமாளுகிருன்
மற்றுமுள்ளநாடனைத்தும் மன்னனரசாளுகின்ருன்
அரசாளும்நாயகியாள் அல்லிப்பெருமாளும்
காவலர்கள்பாண்டவர்கள் காடுறைந்தநாள்முதலாய்
மாலைமுடிபாண்டவர்கள் வனவாசம்போனமுதல்
வண்டார்குழலாளும் மயிர்விரித்தநாள்முதலாய்
மாதமொருமுறைதான் வருவாள்கொலுமுகத்தில்
என்றுரைக்கதூதனவன் ஏதுரைப்பார்கர்னரவர்
நல்லதுதூதுவனே நான்றங்குமண்டபத்தில்
போசனமாகுதுகாண் பொருந்தியமுதுண்டு
நடவுங்காண் தூதரென்று ராசமன்னர்சொல்லுகையில்
அவ்வசனங்கேட்டு அத்தூதனேதுசொல்வான்
உண்டுபசியாறிவந்தேன் உங்கள்கிருபையினல்
போசனங்கள்தேவையில்லை புகழ்வீருயெந்தனுக்கு
வெகுநேரஞ்சென்ருலே மெல்லியருங்கோபிப்பாள்
மாதினிடகோபத்தை மன்னவரேநீரறிவீர்
போகவிடைதாருமென்று புகழ்வீரன்தெண்டனிட்டான்
அவ்வசனங்கேட்டு அலங்காரப்பூஷணியாள்
தாமக்கருங்குழலாள் தாதிகளைத்தோளூன்றி
காரிழையாள்மாது கைலாகுதான்கொடுக்க
மெத்தவேதானடந்து வேல்புருவங்கண்ணளும்
மாமனவர்வந்திருக்கும் மண்டபஞ்சென்றேறினுர்
மாமனுர்பாதமது வணங்கியேதெண்டனிட்டாள்
வந்துபணிந்ததொரு மருமகளைத்தான்பார்த்து
வாழ்வாய்வளருவாய் மாயனடிபெறுவாய்
மகாலட்சுமியைப்போல் மங்கிலியமுண்டாக
மதுரையெல்லாமாள்வதற்கு மைந்தனைப்பெற்றிடுவாய்
வாழ்த்திவிடைகொடுக்க மாதுகருங்குழலாள்

அரிவையற்குசொல்லி அறிக்கையிடவேண்டுமென்று
தன்மனதுக்குள்ளே தார்வேந்தர்தானினைந்து
மேளவகைகளும் விருதுகள்கையமர்த்தி
விருதுபலமுழங்க வீதிப்புறப்பட்டார்
மாதினதுகோட்டைக்கு மன்னவரும்போய்புகுந்தார்
வாசற்பதினெட்டும் வைத்திடுக்குமுத்திரையும்
சேரவேதான்திரிந்து செம்பொன்மணிமுடியான்
உத்தமனர்வீரியனும் உட்கட்டிற்போய்புகுந்தான்
காலுக்குநீர்வார்த்தார் காரிழைமாதகியாள்
பாவையழகியரும் பட்டாலடிதுவட்டி
மாணிக்கஆசனங்கள் மன்னருக்குத்தான்போட்டார்
இட்டதொருஆசனத்தில் இன்பமுடன்தானமர்ந்தார்
வந்துஇளைப்பாற மன்னர்திருமுகமும்
கவரிபணிமாறினர் கட்டழகிதாதியர்கள்

### கர்னன் கலந்தாரியை தாதிகளைவிட் டழைப்பது

தமக்குகவரியிட்ட தாதிமுகம்நோக்கி
அரசாளும்நாயகியை அல்லிதிருமகனர்
போரஞ்சாவீரன் புலந்திரனர்தேவியரை
காரிழையாள்மாது கலந்தாரிநாயகத்தை
ஆரமுலையாளை அழைத்தோடிவாருமென்றன்
தன்கையில்கவுரியை தானொருத்திக்கைகொடுத்து
மங்கையாள்பள்ளிகொண்ட மண்டபத்திற்போய்புகுந்தா [ள்
திருவேயுருவழகே செல்வப்பெருந்தேவே
அத்திநகருடைய அலங்காரப்பூஷணமே

### கலந்தாரி கர்னரைக் காண்கிறது

அன்னமேயும்முடைய அம்மானும்வந்தார்காண்
மங்கையரேஉம்முடைய மாமனும்வந்தார்காண்
காசிநகராளும் கர்னரிங்கேவந்தார்காண்
வந்துபணிந்ததொரு மாதினதுதூதனுக்கு
உத்தரீயப்பட்டுகளும் உடுக்கநல்லஆடைதந்தார்
வாய்த்தயிலைச்சுருளும் வர்னப்பழக்காயும்
காவலனும்வீரியனும் கைநிறையஅள்ளியிட்டான்
போகவிடைபெற்று போய்விட்டான்தூதனவன்
அப்போதுகர்னர் ஆலோசனைபுரிந்து

## கர்னன் கலந்தாரி கோட்டைக்கு வருகிறது

காரிழையாள்மாதுநல்லாள் கலந்தாரிநாயகிக்கு
அவர்-மைத்துனனுர்மீறி வளர்ந்தவருமைகளும்
தோரணக்கழுவுதனில் சுந்தரனேப்போட்டிடுவேன்
உத்தமிமாருங்களே ஊசிதூண்டில்போட்டிடுவேன்
என்றுமிகக்கோபித்து எரிபறந்துகண்சிவந்து
வாளேயுருவிக்கொண்டு மன்னவரும்புறப்பட்டார்
வாசற்படிகடந்து மன்னன்பெருமாளும்
மற்றுமொருநினேவாய் மன்னவனுந்தானினேந்து
அவள்-ஆச்சியரைகேட்டு அறிந்துமேநாம்வருவோம்
என்று-வாளேயுறையிலிட்டு மன்னரதிகர்னர்
தருமமுடியழகன் தலேவாசல்தான்கடந்து

## கர்னர் கலந்தாரியின் தாயாரைக்கேட்க வருகிறது

அவன்-சேனேபரிகலமுந் திரளுமணியுடனே
வந்துபணிந்ததொரு மகளேயும்பாராமல்
கோபமுடனேயந்த கொற்றவனுந்தானடந்தார்
மாதினதுகோட்டையை மன்னவனுங்கிட்டிவந்தான்
துன்னுங்கருங்குழலாள் துற்சடையாளப்போது
மேளவகையும் விருதுடனேமெல்லியரும் [ன்
கேளிக்கைப்பார்த்திருந்தாள் கிளிமொழியாள்தங்களுட
மாதினதுகோட்டையை மன்னவனுங்கிட்டிவந்தார்
தண்டிகையைவிட்டிறங்கி தருமமுடியானும்
உத்தமனுர்வீரியனும் உட்கட்டிற்போய்புகுந்தார்
தாமக்கருங்குழலாள் தாதியெதிர்கொண்டு
இவர்வந்ததொருகாரியம் யாதோதெரியாது
ஆலாத்திகாட்டாமல் அறிவையரேநாமிருந்தோம்
என்றுமிகத்தாதியர்கள் எல்லோருமோடிவந்து
காலுக்குநீர்வார்த்து கட்டழகிதாதியர்கள்
பாவையழகியர்கள் பட்டாலடிதுவட்டி
கவுரிபறிமாறினுர் காரிழைமாரப்போது
தனக்குக்கவரியிட்ட தாதிமுகம்நோக்கி
துன்னுங்கருங்குழலாள் துற்சடையாளெங்கேயென்றுர்
அவ்வார்த்தைதான்கேட்டு அரிவையர்களோடிவந்து
துன்னுங்கருங்குழலாள் துற்சடையண்டைவந்து
தெண்டனிட்டதாதியர்கள் தேனுர்குழலாட்கு

துன்னுங்கருங்குழலாள் துற்சடையாள்தான்பார்த்து
எங்குவந்தாய்தாதி என்க்கறியக்கூறுமென்ருள்
கர்னர்வந்தாரென்று காரிழைமார்சொல்லுகையில்

## கர்னரைக்காண துற்சடை வருகிறது

கர்னர்வந்தாரென்றவுடன் கடுகியெழுந்திருந்தாள்
பட்டுபளபளென்ன பாடகக்கால்சோதிமின்ன
முத்துமினுமினென்ன மோதிரக்கால்சோதிமின்ன
மாதுநடையசைந்து வந்தாளேமயில்போல
கர்னரதுபாதத்தில் கட்டழகிதெண்டனிட்டாள்
வந்துபணிந்தவளை வாழ்த்தியந்தமன்னவரும்
ஆசனம்போட்டார் அங்கிருக்கும்தாதியர்கள்
இட்டதொருஆசனத்தில் இருந்தாளிளங்கொடியும்
அங்கவளநாட்டார் அதிகர்னர்திருமுகத்தை
அண்ணு-வாடியிருப்பதென்ன மன்னர்திருமுகங்கள்
சீரியிருப்பானேன் செண்பகப்பூமேனியெல்லாம்
அலர்ந்தசெந்தாமரைப்போல் அண்ணுவுன்திருமுகங்க [ள்
கருகியிருப்பதென்ன கர்னர்பெருமாளே
மானுகங்கொண்ட மன்னன்திரியோதிரன்
இடும்பனவனுன்னை யேடாகூடம்சொன்னுனே
என்னகருமமிது எனக்கறியச்சொல்லுமென்ருள்
என்றுமவள்கேட்க எடுத்துரைப்பான்மன்னவனும்

## கர்னர் துற்சடைக்குச் சொல்லுவது

எனக்கு-பத்தினியாள்சாபம் பலிப்பதற்குமுன்னுக
அரசாளும்நாயகியாள் அல்லித்திருமகனுர்
போரஞ்சாமன்னென் புலந்திரவீரியரும்
இந்திரனுர்தேவி என்னகதிபோனுலும்
நாமக்குழலாளென் தலைக்குவினைசெய்தாளோ
வேல்பொருதுங்கண்ணுளும் வெட்டியெறிந்திடுவாள்
என்றுரைக்ககர்னர் ஏதுரைப்பாள்துற்சடையும்
மாதுநல்லாளிப்பொழுது வன்கொடுமைசெய்தாக்கால்
வேல்பொருதுமல்லியம்மாள் வெட்டவினைசெய்வாளோ
நீர்-மாளுகிறகாரியமேன் மன்னன்பெருமாளே
என்னகருமம் எனக்கறியச்சொல்லுமென்ருள்
காசிவளநாட்டார் கர்னரவரேதுசொல்வார்

காரிழையாள்மாது கலந்தாரிநாயகிக்கு
பொல்லாமசக்கைகள் பொருந்திற்றுபொற்கொடிக்கு
ஆகாதமசக்கை ஆரிழைக்குமுண்டாச்சு
வண்டார்குழலாட்கு மைந்தனுய்த்தோன்றுகுது
மதுரைப்பெருமாளும் வந்ததுகாணேமே
என்னகருமமோ என்றுரேகர்னரவர்
துன்னுங்கருங்குழலாள் துற்சடையாள்கூறுவாள்
மாதுமணவாளன் வந்தால்வரவேணும்
உமது-மைந்தன்புலந்திரனர் மன்னன்தான்வரவேணும்
மற்றுமொருமன்னவர்கள் வாராரோகாவலிலே
வாசற்றடைதாண்ட வருவாரொருவருண்டோ
தாதியர்களுக்கு தையலர்கள்சொல்லலையோ
தாதியரைகேட்கிலையோ தார்வேந்தாவென்றுரைத்தாள்
தங்கையவள்சொல்லுகையில் தனஞ்செயனர்கூறலுற்றர்
தாதியரையெல்லாம் தனித்தனியேகேட்டுவிட்டேன்
தாங்களெல்லாமறியோமென்று சன்மேலேஆணையிட்
துன்னுங்கருங்குழலாள் துற்சடையுந்தான்கேட்டு [டார்
மாதுதிடுக்கிட்டு வயிறுமொருகைபிசைந்து
இழந்தோமேநாமும் இளங்கொடியேயின்றேடே
ஆர்சொல்லுங்கேளானே அரவக்கொடிவேந்தன்
என்று-ஆரவிளமுலையா ளறைந்துகொண்டுதானழுதாள்

### துற்சடையாள் கலந்தாரியை காணவருதல்

ஆரணங்குமவள்சேதி அறிந்துநான்வருவேனென்று
வேல்புருவங்கண்ணும் வேந்தரைக்கையமர்த்தி
மன்னவரைக்கையமர்த்தி மாதுவெளியில்வந்தாள்
தண்டிகைகொண்டுவந்தார் தாமக்குழலாட்கு
தாமக்குழலாளும் தண்டிகைமேலேறினள்
வண்டார்குழலாளை மறைத்தார்கள்குடையதனல்
சுற்றிபிரம்படிக்க தோழியர்சூழ்ந்துவர
மாதினதுகோட்டையண்டை மங்கையரும்வந்துவிட்
வாசற்பதினெட்டும் வைத்திருக்குமுத்திரையும் [டார்
சேரவேதான்திறந்து தேனர்குழலாளும்
தண்டிகைவிட்டிறங்கி தையலந்ததுற்சடையாள்
ஓடமலர்க்கண்ணும் உட்கட்டிற்போய்புகுந்தாள்
தாமக்குழலியர்கள் தாதிகளெதிர்கொண்டு

காலுக்குநீர்வார்த்தார் காரிழைமார்தாதியர்கள்
பாவைபழகியருங் பட்டாலடிதுவட்டி
வந்துயிளைப்பாற வான்கவரிவீசினர்கள்
மாணிக்கஆசனத்தில் மங்கையரும்வீற்றிருந்தாள்
தாதிமுகம்நோக்கி தையலருமேதுசொல்வாள்
காரிழையாள்மாது கலந்தாரிநாயகத்தை
ஊரமுலையாளை அழைத்துவாயிங்கேயென்ருள்
தன்-கையின்கவுரியைத் தாளெருத்திகைகொடுத்து
வீசுங்கவரிதனை வேளெருத்திகைகொடுத்து
மங்கையரும்பள்ளிகொண்ட மண்டபமேபோய்புகுந்து
அழகேதிருவுருவே அலங்காரப்பூஷணமே
அன்னமேசொர்னமே அமிர்தமடமானே
சாந்துகழுத்தியரே சந்தனப்பூமேனியரே
ஆரணங்கேயும்முடைய ஆச்சியழைக்கின்ருள்காண்
ஆச்சியென்றுசொல்லுகையில் அதிகமனமகிழ்ந்து
பூவணையைவிட்டிறங்கி பொற்கொடியாள்நாயகியும்
மாதாவின்பாதமது வணங்கியேதெண்டனிட்டு
வண்டார்குழலாள் மலரணையாள்பூவெடுத்தாள்
தாமக்குழலாளும் தையலரைதோளூன்றி
காரிழைமாதருக்குக் கைலாகுதான்கொடுக்க
மெத்தெனவேதானடந்து வேல்பொருதுங்கண்ணாளும்

**துற்சடையாள் புத்திரியைக் கண்டது**

மாதாவும்வீற்றிருக்கும் மண்டபஞ்சென்றேறினள்
வந்துபணிந்ததொரு மகளாரைவாழ்த்துகின்ருள்
வாழ்வீர்வளந்திடுவீர் மாயனடிபெறுவீர்
அத்திபுரமாள அரசுகளைப்பெற்றிடுவீர்
கண்களிலேயொத்திக் கனிவாயைமுத்தமிட்டு
கற்பூரந்தின்னதொரு கனிவாயைமுத்தமிட்டு
வண்டார்குழலாரை வாய்நெருடிமுத்தமிட்டு
ஏரிட்டுப்பார்த்தார்கள் இளங்கொடியாள்சீர்வடிவை
பார்த்தாள்பலகாலும் பார்த்தன்மருமகளை
காசிலிவர்னர் கர்னருரைத்ததெல்லாம்
பொய்யென்றிருந்தேன் புகழ்வீரன்சொன்னதெல்லாம்
மெய்யாகத்தோன்றுதே வேல்புருவங்கண்ணுட்கு
சுற்றிநிற்கும்பெண்கள் சூழ்ந்திருக்குந்தாதியர்கள்

அங்கவரைக்கண்காட்டி ஆரமுலையாளும்
கூறுவாள்வாய்திறந்து கொம்பனையைத்தான்பார்த்து
வண்டார்குழலாளே மைந்தனுய்தோற்றுதுகாண்
மன்னர்திருமகனுர் வந்தாரேயிவ்விடத்தில்
வாள்விஜயன்புத்திரனுர் வந்தாரோவுளவாக
கற்கோட்டைமுத்திரையுங் கர்னரதுவாசலிலே
அரசாளும்பூமுடியாள் அல்லிவரவிட்டாளோ
ஆகாயவான்புரவி அவரேறிவந்தாரோ [ருர்
உனது-மைத்துனனுர்வந்த வாரெனக்குசொல்லுமென்
மாதுமணவாளருக்கு மருவவிட்டுபாரேனே
என்கண்ணுட்டிநாயகரை கண்ணுலேபாரேனே
மாலைமுடியாரை மறையவைத்துப்பாரேனே
ஏகாந்தமாக எனக்கொருகால்சொல்வாயோ
மைத்துனனுர்வந்த வகையெனக்குச்சொல்வாயோ [பாள்
அவள்-வார்த்தைகள்பேசாள் மறுவார்த்தைதானுரைப்
பூஞ்சிலம்பைப்பார்த்து புனக்கிளியுந்தானுரைப்பாள்
கண்டாளேமவுனத்தைக் காரிழையுமப்போது
காசிலிவர்னர் கர்னர்பெருமாளும்
மாளுகிறேனென்று வாளுருவிகைபிடித்து
ஆயுதம்நாட்டி அலைதாரன்மாளுகிறுர்
காசிலிவர்னர் கர்னரேமாண்டாக்கால்
மகாராஜராஜர் மன்னவர்கள்நூற்றுவரும்
சேரவேமாளுவார் செம்பொன்முடிராஜர்
உங்களையர்தான்முதலாய் என்தாயார்தன்முதலாய்
நாங்கள்-அத்தனைபேரும் அழியத்திருவுளமே
மாளத்திருவுளமே வண்டார்குழலாளே
மைத்துனனுர்வந்த வாறெனக்குச்சொல்லுமென்றுள்
இவள்-வார்த்தையுரையாமல் மறுவார்த்தைபேசாமல்
தன்-பூஞ்சிலம்பைப்பார்த்து புனக்கிளியுந்தானிருப்பாள்
துன்னுங்குழலாள் திற்சடையுங்கூறுவாள்
மகாராஜராஜாக்கள் மன்னவர்கள்தம்மாணை
அரசாளும்நாயகியாள் அல்லித்திருவாணை
வனவாசம்காடுறையும் மன்னர்திருவாணை
மாதுகுழல்விரித்த மயிலணையாள்திருவாணை [மென்றுள்
உள்-மைத்துனர்மேல் ஆணைகண்டீர்மாதரசேசொல்லு
என்னுணைமாதரசே எனக்குனக்குசொல்லுமென்றுள்

மைத்துனர்மேலாணையிட மாதருங்கோபித்து
வண்டார்குழலாளும் மலரணையைவிட்டிறங்கி
பள்ளிகொள்ளுமண்டபத்தே பைங்கிளிஉட்புகுந்தாள்
தழுவணைமில்கைகொடுத்து தையலருஞ்சார்ந்திருந்தாள்
துன்னுங்கருங்குழலாள் துற்சடையுந்தான்பார்த்து
மாதுதிடுக்கிட்டு வயிற்றைப்பிசைந்துகொண்டாள்
இழந்தோமேநாமும் இளங்கொடியைமிந்நேரம்
ஆரமுலையாளும் அழகியகண்முத்துதிர்த்தாள்
தாமக்குழல்மங்கையர்கள் தாதியர்கள்வந்துநின்று
மாதிருக்கமண்டபத்தை மங்கையர்கள்போய்புகுந்து
இத்தனைஆணைக்கும் இருந்தீர்தாய்மடிமேலே
மைத்துனன்மேலாணையிட வந்துவிட்டீர்கோபித்து
உன்-மைத்துனனரிங்கே வந்தபடிதப்பாது
ஆணழகரிந்திரனர் வந்ததாய்த்தோன்றுகுது
காசிலிவர்னர் கர்னர்பெருமாளும்
மாளுவேனென்றுசொல்லி வாளுருவிகைபிடித்து
ஆயுதம்நாட்டி அவரிருக்கபூங்கொடியே
அங்குதிசைநாட்டான் அவர்மாண்டாராமானல்
மகாராஜாக்கள் மன்னவர்கள்நூற்றுவரும்
சேரவேமாளுவார் செம்பொன்மணிமுடியார்
உங்கள்-ஐவர்முதலாக ஆச்சியருந்தான்கூட
ஆரணங்கேநாங்கள் ஆயிரம்பேர்தாதியரும்
இத்தனைபேர்மாள இகழத்திருவுளமோ
மாளத்திருவுளமோ வண்டார்குழலாளே
மைத்துனனர்வந்த வகைபிரிதுச்சொல்லுமென்ருள்
அதற்குப்பவளசேனை அல்லிமருமகளை
பார்த்தார்கள்தாதியரும் பைங்கிளிமாரெல்லோரும் [ருர்
உமது-மைத்துனர்மேலாணை மாதரசேசொல்லுமென்
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியவள்சொல்லுகையில்
ஆரணங்கேநீரும் ஆணைவிடுஞ்சொல்லுகிறேன்
நீர்சொன்னபிறகல்லவோ தோகையாணைவிடுவதுகாண்

## கலந்தாரி தாதிகட்குச் சொன்னது

காரிழையாள்மாது கலந்தாரியேதுரைப்பாள்
மூழுகியநாலாநாள் மூருகுழலேயெல்லோரும்
உடனுகப்பள்ளிகொள்ளும் உண்டானபெண்களெல்லாம்

பாதியிரவுசென்று பதினாறுநாழிகையில் [கு
வீசுதுகாண்மேனியெல்லாம் வெருநெருப்பாயெங்களுக்
மண்டபத்தின்கூடத்தில் மாதாவேபள்ளிகொண்டோம்
அன்றையராத்திரி அருச்சுனனார்புத்திரரும்
ஆகாயவான்புரவி யவரேயலர்தாரன்
ஆருமறியாமல் அங்கொருவர்காணாமல்
சந்தனமுங்குங்குமமுஞ் சவ்வாதுபரிமளமும்
வகைவகையாய்பூஷணங்கள் வகையுடனேதான்கொடுத்
அன்றையராத்திரியில் அவர்வந்துபோனார்காண் [து
அடையாளந்தான்கொடுத்து அவர்போனார்தென்மது
எங்கேயடையாளம் என்றாளேதாதியவள் [ரை
மாணிக்கப்பேழையிலே மாதரேகட்டிவைத்தேன்
இத்தனை ஆக்கினைக்கு இருந்தீர்காண் தாய்மடிமேல்
மைத்துனர்மேலாணையிட மாதரசேகோபித்தீர்
மகாராஜராஜாக்கள் மன்னர்மேலாணையிட்டேன்
வனவாசங்காடுறைந்த மாமன்மேலாணையிட்டேன்
மாமியார்பாஞ்சாலி மயிலாணைமேலாணையிட்டேன்
அரசாளும்நாயகியாள் அல்லிமேலாணையிட்டேன்
உமது-மைத்துனராணை மூக்காலும்நாலும்விட்டேன்
ஏலக்குழலாளே இருமென்றெழுந்திருந்தாள்
துன்னுங்கருங்குழலாள் துற்சடையாள்தானிருக்க
மாதிருக்குமண்டபத்தே மயிலணையாளோடிவந்து
ஆருமறியாமல் அங்கொருவர்காணாமல்
அடையாளந்தான்கொடுத்து ஆணழகர்போனாராம்
மாணிக்கப்பேழை மாதராதுமுன்னேவைத்தாள்
அல்லிக்கயிறும் அழுத்தியசீராவும்
சீருவுங்கச்சை திருமுடியுந்தானெடுத்து
அல்லியடையாளமென்று அரிவையவள்சொல்லலுமே
ஆணிப்பொன்னாலே அழுத்திட்டஅடையாளம்
சபதமுடித்தாரே தர்மமுடியாரும்
இப்படிக்குமீறி இந்திரரும்வளர்ந்தாரோ
நாமக்குலவிளக்கு நாயகர்வீரியரும்
செம்பொன்முடியாருஞ் செங்கோல்பிடித்தாரோ
முத்திரைமோதிரத்தை முருகுழலாள்தானெடுத்து
கட்டழகன்மோதிரத்தைக் கண்களிலேதானுமொத்தி
பவுத்திரமோதிரத்தை பைங்கிளியாள்தானெடுத்து

கண்மணிநாயகரைக் காணேனெருக்காலும்
மாதுமணவாளன் வந்ததைப்பாரேனே
காவலர்கள்வீரியரைக் கண்ணாலேபாரேனே
நூலால்கடுந்திரளார் நூற்றெருவர்காணமல்
போதேவருந்தடங்கன் பொன்னுருவிபாளையத்தில்
பாராமற்போனேனே பாவிநானானேனே
காணதிருந்தேனே கண்ணற்றுளானேனே
கண்டோமேநாமுமிந்தக் கட்டழகிநிண்ணயத்தை
ஒரு-தாதியறிந்தாளோ தையலதுதன்னடத்தை
என்று-திரேகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
பூட்டிமிகவிட்டுதாம் பொன்னுபரணமெல்லாம் [மென்று
எங்கள்-அண்ணருக்குசொல்லி அறிக்கைமிடவேண்டு

துற்சடையாள் கர்னருக்குச் சொல்ல வருகிறது

சுற்றிப்பிரம்படிக்க சூழ்ந்துவர அறிவையற்கு
ஆயிரம்பேர்தாதியர்கள் அருகினிலேபுடைசூழ
ஏறிப்பிரம்படிக்க ஏந்திழைமாரெச்சரிக்க
மாறிப்பிரம்படிக்க மண்டபஞ்சென்றேறினல்
தண்டிகைவிட்டிறங்கி தாமக்குழலாளும்
ஆரவிளமுலையாள் அரண்மனையிற்போய்புகுந்தாள்
அங்குதேசாதிபதி அதிகர்னர்பெருமாளும்
ஏறிட்டுப்பார்த்தார் இளங்கொடியாள்சீர்வடிவை
அலர்ந்தசெந்தாமரைப்போல் ஆரணங்குதிருமுகங்கள்
தாமமுடியாளும் தலைதப்பிவிட்டாளோ
வேல்பொருதுங்கண்ணும் வெட்டுதலைவிட்டாளோ
என்னகருமந்தங்கை எனக்கறியசொல்லுமென
அஞ்சாதேஅஞ்சாதே அண்ணாவேயஞ்சாதே
மதுரைதுரைமகனும் வந்தார்மறைவாக
உன்-மைந்தர்புலந்திரரும் மாதிடம்வந்தார்காண்
ஆருமறியாமல் அலைதாரனங்குவந்து
அடையாளந்தான்கொடுத்து அல்லிமகன்போனனும்
அரசுமன்னர்வைத்த அடையாளமென்றுசொல்லி
மாணிக்கப்பேழையை வைத்தாளேமுன்னிலையாய்
ஆணிப்பொன்னாலே அழுத்தியனுப்பிவிட்ட
மாற்றாயிரம்பொன்பெற்ற மாணிக்கவன்சரமும்
கண்டாரடையாளம் கர்னர்பெருமானும்

இப்படியாய்மீறியே இந்திர னும்வளர்ந்தானே
நாடாளக்கற்ருனே இராசகுலவிளக்கு
ஊராளக்கற்ருனே உத்தமசிகாமணியும்
செம்பொன்மணிமுடியான் செந்நாடுபூண்டானே
தென்னமுடிவேந்தன் செங்கோல்பிடித்தானே
மன்னன்திருமகனும் மண்டலத்தையாள்கிருனே
முத்திரைமோதிரத்தை முடிமன்னர்தானெடுத்து
கட்டழகன்மோதிரத்தைக் கைதலைரிலேதானணிந்தான்
சரியாயிருந்ததுவே தருமமுடியாற்கு
பவுத்திரமோதிரத்தை பார்வேந்தன்தான்பார்த்து
கட்டழகன்மோதிரத்தை கண்மலரிலொற்றிக்கொண்டார்
மாதுமணவாளன் வந்தபடிதப்பாது
மகாராஜராஜாவை மறையவைத்தும்பாரேனே
மைந்தன்புலந்திரன்றன் வடிவழகைப்பாரேனே
மாதுமணவாளனுக்கு மருவிட்டுப்பாரேனே
காணுதிருந்தேனே கண்ணற்ருனேனே
பாராதிருந்தேனே பாவிநானுனேனே
முத்திரைமோதிரத்தை முடிமன்னர்கையிலிட்டு
மற்றுமடையாள மருமகளேகாட்டுமென்ருர்
காட்டினுளடையாளம் கர்னர்மனமகிழ
அடிசில்வரும்வேளை ஆச்சுதுகாணண்ணுவே
உண்டுபசியாறி உத்தமரேநடவுமென்ருள்

## கர்னர் புறப்பட்டு வருகிறது

அங்குதேசாதிபதி அதிகர்னரேதுசொல்வார்
மகாராஜராஜாக்கள் மன்னவர்கள் நூற்றுவரும்
சும்மாவிருப்பார்கள் துன்னுங்கருங்குழலே
அங்கேஅடிசில் அமுதுண்பேன்தங்கையரே
ஏலக்குழலியரே இருவென்றெழுந்திருந்தார்
வேந்தரதிகர்னர் வெளியேபுறப்பட்டார்
வேட்டைபரிகலமும் வேந்தனதுசேனைகளும்
காட்டில்வாழ்மானுகளும் கானமயிலுகளும்
யானைமுயலுகளும் அன்பானவுடும்புகளும்
சிட்டுக்குருவிகளும் சிறுகுருவிபூங்குருவி
மன்னவர்கொண்டிருக்கும் வல்லுறுகுருவிகளும்
சேரவந்துகூடிற்று சேனைகளத்தையும்

வேட்டைபுரவிமேல் வேந்தனும்தானேறி
ஒக்கபுரவிவிட்டார் உண்டானதோழரெல்லாம்
சேனைமனுவுகளுந் திரளும்பரிகலமும்
மகாசேனைதன்னுடனே மாலைநெடுமுடியார்

### அம்பலத்தில் இரகசியம்

கூடிவருகையிலே கும்பல்சூழ்ந்துபேசுகிறார்
காரிழையாள்மாது கலந்தாரிசெய்திகளை
தங்களுக்குள்ளேதான் தனித்தனியேபேசலுற்றார்
இரகசியங்கள்மிஞ்சுது ராஜாக்கள் அம்பலத்தில்
அந்தரகசியம் அம்பலத்தில்பெருகியதே
எழுதறிய அம்பலத்தில் ஏகாந்தமிஞ்சினதே
தேசத்தழகுமன்னன் திரியோதிரன்தான்கேட்டு
தனக்குகவரியிடும் தாதிமுகம்நோக்கி
ஏதடிபூந்தாதி யேகாந்தரகசியங்கள்
இரகசியங்கள்பெருகுது நலமானதாதியரே
பாண்டவர்கள்ஐவரும் படைகூட்டிவாராரோ
ஆணழகர்பாண்டவரின் ஐவர்வெளிப்பட்டாரோ
கட்டழகர்பாண்டவர்கள் காலாள்வருகிறதோ
தருமராதுதம்பியர்கள் தனஞ்செயர்கள்வாராரோ
அம்பலத்துரகசியங்கள் அறிந்துவாதாதியென்றான்
வீசுங்கவுரிகளை வேறொருத்திகைகொடுத்து
படிக்குப்படிநடந்து பாவையிளந்தாதி
மானுகன்அம்பலத்தில் வந்தாளேதாதியவள்
உற்றிருந்துகேட்கிறாள் ஒருவருஞ்சொல்லார்கள்
கோனுதமாதவத்துக் குருக்களடிபணிந்தாள்
ஆர்பணிதாதிநீ அரியவுரையுமென்றார்
ஆர்பணியுமல்லநான் ஐயாவேயுன்பணிதான்
தேசத்தழகுமன்னன் திரியோதிரன்பணிநான்
என்னகருமமிது எனக்கறியச்சொல்லுமென்றாள்
அம்பலமெல்லாம் அடையாரகசியங்கள்
எழுதறிய அம்பலத்தில் ஏகாந்தமிஞ்சுகுது
பாண்டவர்களஐவரும் படைகூட்டிவாராரோ
ஆணழகர்பஞ்சவர்கள் ஐவர்வெளிப்பட்டாரோ
காவலர்கள்பாண்டவரின் காலாள்வருகிறதோ
அம்பலத்துரகசியங்கள் அறிந்துவரச்சொன்னார்கள்

என்னகருமமையா எனக்கறியச்சொல்லுமென்ருள்
அவ்வார்த்தைகேட்டு அன்பாய்குருக்களுந்தான்
சொல்லப்பயப்படுவோஞ் சுதந்திரதாதியரே
பயப்படுவாருமுண்டோ பார்வேந்தர் அன்னமுண்டு
அரசன்சோறுண்டிருந்து அஞ்சிநடுங்குவதேன்
சொல்லுமையாவென்று தோகையிவள்கேட்கையிலே
வேறென்றுமில்லைகாண் வேல்புருவங்கண்ணாளே
அரசாளும்நாயகியாள் அல்லித்திருமகனர்
பொன்னுமணியழகர் புலந்திராதேவியற்கு
காரிழையாள்நல்லாள் கலந்தாரிநாயகிக்கு
வண்டார்குழலாட்கு மைந்தராய்த்தோன்றுதுகாண்
மதுரை துரைமன்னன் வந்ததுவுங்காணுமே
அதனாலேகாணுகுது அடர்ந்தரகசியங்கள்
தங்களிலேகூட்டித் தனித்தனியேபேசுகிருள்
அவ்வார்த்தைகேட்டு அடிபணிந்துதாதியர்கள்
மீளத்திரும்பிவந்தாள் வேல்புருவங்கண்ணாளும்
தேசத்தழகுமன்னன் துரியனடிபணிந்து
ஆசனத்தின்கீழே யடிபணிந்துதெண்டனிட்டாள்
என்னகருமமடி எனக்கரியச்சொல்லுமென்ருன்
சொல்லப்பயப்படுவேன் சுந்தரப்பூமுடியோன்
பாவையழகியற்குப் பாவம்வரக்காரணமேன்
அரசாளும்நாயகியாள் அல்லித்திருமகனர்
அர்ச்சுனனூர்ன்றெடுத்த அழகுபுலந்திரனும்
போர்க்கஞ்சாமன்னன் புலந்திரனுர்தேவியற்கு
ஆகாமசக்கை யருமசக்கையாரிழைக்கு
இட்டப்படுக்கையிலே எழுந்திருக்கதள்ளாது
உண்ணுள்குளியாளாம் ஒருநேரமுண்பாளாம்
பந்துபிடித்தறியாள் பள்ளாங்குழியாடாள்
சிந்துகவிகேளாமல் தேடினூர்குழலாளும்
வேல்யுருவங்கண்ணாள் விளையாடசம்மதியாள்
வண்டார்குழலாட்கு மைந்தராய்த்தோன்றுதுகாண்
மதுரைவதிநாட்டான் வந்துதவுங்காணுமே
அதனாலேகாணுதையா யம்பலரகசியங்கள்
தங்களிலேகூடித் தனித்தனியேபேசுகிருர்
என்றுரைக்கத்தாதி இருசெவியில்கேட்டு
தேசத்தழகுமன்னன் துரியோதனப்பெருமான்

கண்டீரோ தாதிகாள் கர்னர்செய்தகாரியத்தை
ஆற்றிலேதான்மிதந்து அலைந்தொழுகிப்போகாமல்

### துரியோதிரன் தாதிகளுக்குச் சொல்வது

தேர்ப்பாகனென்று சிலபேர்கள்சொல்லாமல்
பிள்ளைக்குப்பிள்ளையாய் பெரியபிள்ளையாகவேதான்
பொன்னுல்மகுடமது பிரபலமாய்த்தான்கொடுத்து
மாற்றிவளர்த்துநான் மகுடமுடிதரித்து
உந்தனைநானுமிப்போ வுள்ளாளாய்வைத்தேனே
செகத்திற்புதையாதே சிறுமணல்பாயாதே
உத்தமனுமெந்தனுக்கு வுபசாரஞ்செய்தேனே
தேர்ப்பாகனென்று தெரியவேவேண்டுமோ
சமயமுதலிகளைச் சாமர்த்தியமந்திரிகளை
அங்கவரையெல்லாம் அனுப்பிவிடைகொடுத்து
சேரவிடைகொடுத்துச் செம்பொன்முடியானும்
சிங்காதனத்தைவிட்டு திகழக்குதித்திறங்கி
அருந்தடிகாணுதே அரண்மனைபோய்புகுந்து
தாமக்கருங்குழலாள் தாதியர்கள்மூப்பியரும்
காலுக்குநீர்கொண்டு காரிழைமார்வந்தார்கள்
சிங்காதனமிட்டார் தேனுர்குழலார்கள்
இட்டதொருஆசனத்தில் இருந்தானேதார்வேந்தன்
பேடைமலக்கண்ணுள் பெருந்திருவாளெங்கேயென்ருர்
நீலக்கருங்குழலாள் நீலமுத்துமண்டபத்தில்
கிளிமொழியாள்தங்களுடன் கேளிக்கைப்பார்க்கிருர்கள்
மாதுயிருக்குமந்த மண்டபத்திற்போய்புகுந்து
நூலார்கடுந்திரளார் நூற்ரெருவர்தேவியற்கு
மைத்துனனுர்வார வரவுக்கண்டுமங்கையர்கள்

### பெருந்திருவாள் துரியோதனனைக் கண்டது

சிங்காதனத்தைவிட்டுத் திகழக்குதித்திறங்கி
மாதர்களெல்லோரும் மறைவாகப்போருர்கள்
பேடைமலர்க்கண்ணுள் பெருந்திருவாள்தான்பார்த்து
எதிரேநடந்துவந்து ஏலக்குழலாளும்
மானுகங்கொண்டீரோ மதியற்றுப்போனீரோ
தம்பிமார்தேவியென்று மணிக்கதவைதான்பிடித்து
பள்ளியறையில் பைங்கிளியும்கொண்டுசென்று

பேடைமலர்க்கண்ணாள் பெருந்திருவுங்கூறுவாள்
தருமமுடியாரே தனித்துவரக்காரியமேன்
என்னகருமமது எனக்கறியச்சொல்லுமென்றார்
அடி-கண்டாயோமாதே நீ கர்னர்செய்தகாரியத்தை
அவர்-ஆற்றிலேமிதந்து அலைந்துநமூகாமல்
தேர்ப்பாகனென்று சிலபேர்நகையாமல்
பிள்ளைக்குப்பிள்ளையாய் பெரியபிள்ளையாகவென்று
மாற்றிவளர்த்தேனே மகுடமுடிதரித்து
உத்தமனென்றே உலகமெல்லாம்பேருமிட்டு
என்றுயிவனுரைக்க ஏந்திழையுங்கூறுவாள்
பேடைமலர்க்கண்ணாள் பெருந்திருவுங்கூறுவாள்
இந்நாளுறுதியா யிருந்தரசாண்டோமே
சுந்தரப்பூமுடியான் துரோகமொன்றுஞ்செய்ததில்லை
என்னவினைசெய்தார் எனக்கறியச்சொல்லுமென்றார்
அந்தமொழிகேட்டு அரசன்விளம்பலுற்றான்
சுந்தரப்பூமுடியான் சொல்லுவான்வார்த்தையொன்று
கேளாயிளமயிலே கிரீட்டிபயின்றெடுத்த
போர்க்கஞ்சாமன்னன் புலந்திரனார்வீரியன்
ஆனந்தவாழ்மார்பன் அவருடையதேவியரை
காரிழையாள்மாது கலந்தாரிநாயகத்தை
என்னுடையகோட்டையில் இளங்கொடியைவையாமல்
அவள்-ஆச்சியரண்மனையில் ஆரணங்கைவையாமல்
என்னுடையகோவிலிலே தையலரைவையாமல்
வேறேயொருகோட்டைக்கு வேறாகவீடுகட்டி
மாதினதுகோட்டைக்கு மறுபடியும்போனதில்லை
கற்கோட்டைமுத்திரையாங் காவலுந்தன்னுதென்று
வாசலுக்குகாவல் வாள்வீரர்சூழ்ந்துநிற்க
இரவுபகலுமா யிளங்கொடியாள்தன்னுடனே
மருவியுறவாடியே மைந்தன்கெற்பமாச்சுது
பிள்ளைகெர்ப்பமானாள் பெருந்திருவாள்நாயகியே
என்றுமிகவரசன் ஏந்திழைக்குச்சொல்லுகையில்

பெருந்திருவாள் சொல்லுகிறது

பேடைமலர்க்கண்ணாள் பெருந்திருவுங்கூறுவாள்
சிவசிவாவென்னு திருச்செவியில்கையைவைத்தாள்
அரகராவென்று ஆரணங்குமூத்துதிர்த்தாள்

நம்முடையகர்னரை நாம்சொல்லக்காரணமேன்
இந்நாளூறுதியுடன் இருந்துவரக்கண்டோமே
சுந்தரப்பூமுடியான் துரோகமொன்றுஞ்செய்ததில்லை
அவளை-தாயார்முலைகொடுத்து தந்தையால்சீராட்டி
மாரணைமேலே வளர்க்கவைத்தார்தாயாரை
ஏறிட்டுப்பாராரோ என்னுளும்ராஜமன்னன்
நாடகசாலைகளும் நாயகிமாரோடிவந்து
தங்கைதமக்கையென்பார் தையலர்களியாவரையும்
தன்பாதமேகண்ணுகப் பார்த்திருப்பான்புகழ்வீரன்
கர்னரைச்சொல்லுகிற காரியமோவித்தையும்
அங்கவள நாட்டார் அவர்முன்னேசொன்னுக்கால்
ஆயுதத்தால்தன்னுயிரை அழித்துக்கொள்வாராணழகர்
மெல்லியருந்தானுமாய் விசாரித்துவருகிறோம்
என்னுணையென்று இளங்கொடியாள்ஆணையிட்டாள்

## கர்னர் வருகிறது

காசிலிவர்னர் கர்னரவர்வாருராம்
ஆதித்தன்புத்திரனுர் அங்கவள நாட்டழகன்
கெங்கையில்வந்த கீர்த்திப்பிரதாபன்
வைகைப்பெருகிவர வந்தவன்காண்கர்னரவர்
வேட்டைகளாடிவாரார் வேந்தர்பெருமானும்
வெள்ளித்தடிக்காரர் வீரியமாய்ச்சூழ்ந்துவர
துள்ளும்படைவீரர் துடிப்புடனேசூழ்ந்துவர
கண்டாயோமாதே நீ கர்னர்செய்தகாரியத்தை
நாகசுரமேளம் நற்கவரி நின்றூத
கோணக்கொம்பூதுவார்கள் கொற்றவனுர்வீரியற்கு
ஊதினுர்சின்னம் உலகேழுந்தானதிர
விருதுக்குமாலை மெல்லியருங்கேட்டிருந்தாள்
வந்துகுறிகினுர் மானுகனம்பலத்தில்
ஏறிட்டுப்பார்த்தார்காண் இராஜாவினம்பலத்தில்
நான்வந்துகொலைகலைப்பேன் நாடோறுமம்பலத்தில்
இன்றுகொலைகலைந்த தேதோகருமமிது
மானுகனம்பலத்தில் வந்துகுறிகினுர்
வேட்டைபரிசனமும் வேந்தனதுசேனைகளும்
சேரவந்துகூடிற்று சேனைகளத்தனையும்
அங்கவள நாடாளும் அதிகருனர்வீரியனும்

பங்கிட்டுக்கொண்டான் படைமன்னர்சேனையெல்லாம்
சமயமுதவிகளைச் சாமர்த்தியமந்திரியை
அங்கவரையெல்லாம் அனுப்பிவிடைகொடுத்து
பாடும்புலவருக்கும் பட்டருக்குஞ்சித்தருக்கும்
தேனல்லோதாரனவன் தியாகங்கள்தான்கொடுத்து
அங்கவரையெல்லா மனுப்பிவிடைகொடுத்து
சிங்காதனத்தைவிட்டுத் திகழக்குதித்திறங்கி
ஆலாத்திகொண்டுவந்தார் ஐயாயிரந்தாதியர்கள்
முத்தாலேஆலாத்தி முன்னாலேசுத்திவிட்டார்
பவளத்தாலாலாத்தி பத்துநூறாயிரம்பேர்
புரவிவிட்டுத்தானிறங்கி பொற்கருனர்தானடந்தார்
ஒத்தைத்துரைகளுடன் உண்டானதோழருமாய்
கைகட்டித்தானடந்தார் காவலர்களெல்லோரும்
தருமமுடியான் தலைகட்டிற்போய்புகுந்தான்
தாமக்குழலார்கள் தாதிமாரெதிரில்கண்டு
காலுக்குநீர்வார்த்தார் காவலனார்வீரியற்கு
பாவையழகியரும் பட்டாலடிதுவட்டி
ஆசனம்போட்டார்கள் அங்கிருக்குந்தாதியர்கள்
இட்டதோராசனத்தில் ஏறாமல்மன்னவனார்
பேடைமர்க்கண்ணாள் பெருந்திருவாளெங்கேயென்றார்
ஏகாந்தம்பேசுகிறார் இருவரும்பள்ளியறை
நான்வாறேனென்று நாயகமேசொல்லுமென்றார்
பெருந்திருவாளண்டையிலே பொற்கொடியுமோடிவந்து
ஆசனத்தின்கீழே அடிவணங்கிதெண்டனிட்டாள்
வந்துபணிந்தவளை வாழ்த்தியந்தமன்னவனும்
கர்னர்வந்தாரென்று கட்டழகிசொல்லுகையில்
வரச்சொல்லுமென்றுரைத்தாள் மாதுபெருந்திருவாள்
தாதியவளோடிவந்து தையல்வரச்சொன்னாள்காண்
அவ்வசனங்கேட்டு ஆணழகர்வுள்நுழைந்தார்

## கர்னர் பெருந்திருவாளைக் கொன்றது

பேடைமலர்க்கண்ணாள் பெருந்திருவாள்தன்னடிக்கே
ஆசனத்தைக்கீழே அடிவணங்கித்தெண்டனிட்டார்
வந்துபணிந்தவரை வாழ்த்தினாள்மன்னவரை
வாழ்வீர்வளருவீர் மண்ணூழிகாலமட்டும்
நிற்பீர்நிலைதரிப்பீர் நீரரசையாண்டிடுவீர்

நீரேயரசாள்வீர் நீடூழிகாலமெல்லாம்
இருவர் நடுவாக இருத்தீரந்தராஜாவை
ஏறிட்டுப்பார்த்தார்கள் இவருடையதிருமேனி
வாடியிருப்பானேன் மன்னருடதிருமுகங்கள்
விடாய்பட்டிருக்குது வேந்தர்திருமேனி
கட்டித்தயிருகளும் காவடியிலன்னமும்
பாணக்கம்நீர்மோரும் வரவிட்டோம்பார்வேந்தா
விடாய்த்துநீமண்டபத்தில் வேந்தனேவரவில்லையோ
எந்தவழிவந்தீர் என்றாள்பெருந்திருவாள்
ஆச்சிநானந்த அவ்வழியில்வந்ததில்லை
மற்றுமொருவழியே வந்தேனனுச்சியரே
மாலைமுடியானே நீ வருவதற்குமுன்பாக
ஆரப்பசிக்குதென்று அரவக்கொடியாரும்
ஆனந்தவாழ்மார்பன் அடிசலுக்குத்தான்வந்தார்
மாலைமுடியாரே நீவந்தசெய்திகண்டு
தாமிஷமாய்நின்றார்கள் தனஞ்செயர்களிருவருமாய்
மங்களநீராடியே மன்னரிருவருமாய்
ஆனந்தமாய்நீங்கள் அடிசலுக்குவாருமென்றாள்
சிங்காதனத்தைவிட்டு திகழுகுதித்திறங்கி
சுந்தரப்பூமுடியான் தோழரையுங்கோர்த்து
மஞ்சள்நீர்சாலையிலே மன்னவரும்போய்புகுந்தார்

துரியோதனனும் கர்னனும் கூடியது

ஆனபணிகழட்டி ஆனந்தவாழ்மார்பன்
நீனையால்பணிதிகளை நாயகிமார்தான்கழட்டி
மாலைமுடியாரும் மஞ்சள்நீர்தானுடி
ஈரத்துகில்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
தூவட்டங்கொண்டு துவட்டியந்தசுந்தரர்கள்
ஆனபணிபூட்டி ஆனந்தசுந்தரர்கள்
தேனல்லோதாரார் திருநீற்றுக்காப்பணிந்து
செந்தூரப்பொட்டுமிட்டு சிவனையடிபணிந்து
பூசைபண்ணுமண்டபத்திற் போனாரிருவருமாய்
நித்தியபடிதானங்கள் நிறையவேதான்கொடுத்து
செம்பொன்முடியாருஞ் செபதபந்தான்முடித்து
சுந்தரப்பூமுடியான் தோழனையுங்கைகோர்த்து
அமுதுண்ணுமண்டபத்தை அலங்கிட்டுநீர்தெளித்து

எங்குமலங்கரித்து எத்திசையுந்நீர்தெளித்து
பூமியோடொத்ததொரு பொற்றடுக்குதான்போட்டார்
பொற்றடுக்குமேலே புகழ்வீரர்வீற்றிருந்தார்
சிங்கமுக்காலிவைத்து செம்பொன்றளிகைவைத்தாள்
பொரித்தபொரிக்கறியும் பொன்போல்சிறுபருப்பும்
கூட்டிப்படைத்தாள் கொம்பேரிடையாளும்
அந்தஅடிசில் அமுதுண்டபிற்பாடு
அத்தளிகையுண்டபின்பு மறுதளிகைவுண்டார்கள்
கையலம்பிக்கொண்டு கனகமணிமண்டபத்தில்
தாமக்கருங்குழலார் தாதியரும்மூப்பியரும்
வாய்த்தயிலைச்சுருளும் வர்னத்துவர்பாக்கும்
வாங்கியமுதுசெய்து மன்னரிருவருமாய்
அந்திகொலுச்சாமம் ஆச்சுதுகாணந்நேரம்
ஆபரணந்தான்பூண்டு அழகியபட்டுடுத்தி
சுந்தரப்பூமுடியார் தோழனையுங்கைகோர்த்து
ஆனந்தவாழ்மார்பர் அம்பலத்தில்தான்போனர்
சேரக்கொலுவில் சிங்காதனமிருந்து
வந்தெதிரேகண்டார் மாலைமுடியாரை
காசிலிவர்னர் கர்னர்பெருமாளும்
இருமிருமென்று இணைக்கடகக்கையமர்த்தி
சிங்காதனத்திலே சேரவிருந்தார்கள்
ஏறியிருந்தார்கள் எழுபணிசிங்காதனத்தில்

## துரியோதிரன் கர்னரைக் கேட்கிறது

தேசத்தழகுமன்னன் திரியோதிரப்பெருமாள்
கர்னரைத்தான்பார்த்து கபடனெடுத்துரைப்பான்
மானகக்கொடிவேந்தன் மன்னன்முகம்பார்த்து
நீ-பெருகிறஆற்றிலே பேராற்றுப்போகாமல்
சேற்றிலமுந்தாதே சிறுமனல்பாயாதே
பிள்ளைகளுக்குப்பிள்ளையாய் பெரியபிள்ளையாகவுன்னை
மாற்றிவளர்த்தேனே மகுடமுடிசூட்டியுன்னை
மன்னனென்றுபேருமிட்டு மண்ணுளவைத்தேனே
உபகாரமெத்தசெய்தாய் உற்றதொருதேர்ப்பாகன்
என்றுமிவருரைக்க எடுத்துமிகவுரைத்தார்
காசிலிவர்னர் கர்னரவரேதுசொல்வார்
என்னைப்-பேழையில்வைத்ததும்பேருற்றில்விட்டதுவும்

தேர்ப்பாகன் றன்கையிலே சிக்குவதைபட்டதுவும்
என்னை-மாறிவளர்த்து மண்ணுளவைத்ததுவும்
அறியாதேவிந்நாடு அம்பலத்துசேனையெல்லாம்
இந்தப்பேச்சுசொல்லவோ இந்தச்சபைநடுவே
சொல்லவேவேணுமோ சுந்தரப்பூமுடியார்
இந்நாளுறுதியா யிருந்தோமரசாண்டோம்
சுந்தரப்பூமுடியார் துரோகமொன்றும்செய்ததில்லை
இந்நாளுமில்லாதிப்போ தென்னவினைசெய்தேன்
சுந்தரரேசொல்லாமல் சொன்னால்தெரிவதுண்டோ
தீயினாற்சுட்டபுண்ணு சீக்கிரத்திலாறிவிடும்
இப்போ-என்னவினைசெய்தேன் எனக்கறியச்சொல்லும்
தேசத்தழகுமன்னன் துரியோதிரன்கேட்டு
அரசாளும்நாயகியாள் அல்லித்திருமகனார்
போர்க்கஞ்சாமன்னன் புலந்திரன்தேவியரை
காரிழைபாள்மாது கல்ந்தாரிநாயகத்தை
அவள்-ஆச்சியரண்மனையில் ஆரணங்கைவையாமல்
என்னுடையகோட்டையிலே இளங்கொடியைவையாமல்
வேறேயொருகோட்டைகட்டி வீணனவீடுகட்டி
அன்றழித்துக்கட்டி ஆரணங்குதான்கோட்டை
மன்னரதுகோட்டைக்கு மறுபடியும்போனதில்லை
நூலால்கடுந்திரளார் நூற்றுவரும்போனதில்லை
மாதினதுகோட்டைக்கு மறுபடியும்போனதில்லை
வாசலுக்குகாவலாயுன் மைந்தனைகாவல்வைத்து
இரவும்பகலுமா யிளங்கோடியாள்தன்னுடனே
மருவியுறவாட மைந்தனுண்டாக்கிவிட்டார்
என்றுமன்னன்தானுரைக்க இதைக்கேட்டுகர்னரவர்
அரகராவென்றுசொல்லி அரசனுங்கண்சிவந்து
சிவசிவாவென்றுசொல்லி திருச்செவியில்கையைவைத்து
காசிலிவர்னர் கர்னருங்கண்சிவந்து
சீரியவர்கண்சிவந்து செங்கண்முகந்ததும்பி
உருக்கியசெம்பொனது உதிரம்போற்கண்சிவந்து
உன்சோற்றையுண்டதுவும் உன்னரசையாண்டதுவும்
பிஞ்சுதணிமுடியாற் புலனடையவேண்டுமென்று
வேண்டேனினிசென்மம் வேறுநினைப்பதில்லை
மாண்டுமடிந்திடுவேன் வைகுந்தஞ்சேர்ந்திடுவேன்
செத்துமடிந்திடுவேன் சிவன்பாதஞ்சேர்ந்திடுவேன்

மாளுகிறேனென்றுசொல்லி வாளுருவிகைபிடித்தான்
கொற்றவர்கள்கோமான் குலையிலேவாளைவைக்க
அம்பலத்துசேனே அடையக்கொலுக்கலைந்து
சேனேகளத்தனேயும் சேரவந்து பணிந்தார்கள்
ஆனந்தமார்பன் அறியும்வாளால்வீசினூர்

### துரியோதனன் கர்னருக்குச் சமாதானஞ் சொல்வது

தேசத்தழகன் திரியோதனன்பார்த்து
கண்டோமேயென்று கர்னருடகோபத்தை
இந்நாளுங்கண்டதில்லை இவருடையகோபத்தை
ஆருக்குமண்டவொட்டான் அங்கவளநாட்டான்
என்று-சிங்காதனத்தைவிட்டு திகழக்குதித்திறங்கி
பின்னுகவந்து பெருமானைச்சேர்த்தணைத்தான்
இணையீர்யிணைத்தோழா என்னுயிர்காவலனே
காலங்களீரேழும் கண்டுணரவைத்தோனே
என்-தளிகைபுழு நீக்கும் தர்மப்பெருமானே
என்னைக்-கண்டுண்ணவைத்த கர்னர்பெருமானே
தனித்தாய்தனியே தார்வேந்தாவுன்கோபம்
கைபதைக்கவாய்துடிக்க கண்துடைத்துக்கொண்டார்
கண்டார்கணையாழி கட்டழகன்கைதனில்தான்

### கர்னர் புலந்திரன் கணையாழி காட்டினது

இந்நாட்டுவேலையல்ல இந்தக்கணையாழி
மதுரையிலேவேலைகண்டீர் மன்னரசேகோமானே
ஆருடையஆழியிது அடையாளஞ்சொல்லுமென்றூர்
ஆழியெடுத்து அலைதாரன்வாசித்தான்
அரசாளும்நாயகியாள் அல்லித்திருமகனூர்
உன்மைந்தர்புலந்திரனூர் வந்ததுநானறியேன்
அறியாமல்சொன்னேன் அரசேபொறுத்தருள்வீர்
என்று-வாய்த்தயிலைச்சுருளும் வர்னப்பழக்காயும்
காவலர்வீரியற்குக் கைநிறையஅள்ளியிட்டார்
என்னுணை நீரும் இலையமிர்தந்தின்னுமென்றூன்
மன்னுடிவாசங்கள் மன்னர்கையில்தான்கொடுத்தான்
தேசத்தழகுமன்னன் திரியோதனன்கூறுவான்
பருவமதயானை பஞ்சவர்களைவரையும்
நாடுநகரமும் நல்லதொருராச்சியமும்

அடங்கலுந்தோற்று அனைவரும்போனரே
முந்திரிகையிடப்போனீர் முடிமன்னர்கோவிலெல்லாம்
அன்றுயெடுத்துவந்த ஆழியிதுகாணும்
அடையாளமல்லவென்று அலைதாரன்கூறினன்
இப்பெரியவடையாள மெடுத்துவந்துகாட்டோமென்று
எங்கேயடையாளம் எடுத்துவந்துகாட்டுமென்றான்
உத்தமனார்கர்னர் ஊழியத்தைதான்பார்த்து
துன்னுங்கருங்குழலாள் துற்சடையாளரண்மனையில்
மதுரையடையாளம் மாணிக்கப்பேழையிலே
இருக்கிறதென்றுசொல்லி எடுத்தோடிவாருமென்றான்
உத்தமர்கள்வீரியரும் ஊழியப்பேர்தான்கேட்டு
துன்னுங்கருங்குழலாள் துச்சடையாள்தானிருக்கும்
மாதிருக்குமண்டபத்தை வந்துமிகதெண்டனிட்டார்
துன்னுங்கருங்குழலாள் துற்சடையாள்தான்பார்த்து
நீர்-யார்பணிமன்னு அறியவுரையுமென்றாள்
யார்பணியுமல்ல அடியேன்திருப்பணிதான்
காசிலிவர்னர் கர்னர்பணிதானுமென்றான்
ஆரணங்கேயும்முடைய அண்ணர்பணிதானுமென்றான்
மதுரைப்புலந்திரரும் வந்ததுவுமில்லையென்று
மாதுமணவாளர் வைத்தபடியில்லையென்று
காசிலிவர்னர் கர்னர்சந்தேகமாய்
கூறினார்கண்டீரோ கொடிநாகங்கொண்டவரும்
மதுரையடையாளம் மாணிக்கப்பேழையிலே
இருக்குதென்றுசொல்லி எடுத்துவரச்சொன்னார்காண்
எங்கேயடையாளம் எடுத்துவந்துதாருமென்றார்
துன்னுங்கருங்குழலாள் துற்சடையுந்தான்கேட்டு
அவர்-ஆர்சொல்லுங்கேளார் அரவக்கொடிவேந்தன்
இழந்தோமேநாமும் இளங்கொடியையின்றேடே
அரமுலையாளும் அழகியகண்முத்துதிர்த்தாள்
மாணிக்கப்பேழையிலே மாதருங்கைகொடுத்தாள்
வாங்கிதன்கைபற்றி மாலைமுடியானும்
கொண்டுவந்துமுன்னேவைத்தார் கொற்றவனார்தூதுவ
காசிலிவர்னர் கர்னர்திருவடிக்கு [ன்
கொண்டுவந்துவைத்து கொற்றவனுந்தெண்டனிட்டு
மாணிக்கப்பேழையை மன்னவனுந்தான்திறந்து
ஆணிப்பொன்னாலே யழுத்தியகுப்பியிட்டு

ஆயிரம்பொன்பெற்ற அபரஞ்சிவர்னசரம்
மன்னவனுங்கைகொடுத்தான் மாணிக்கமோதிரத்தை
பார்வேந்தன்கைகொடுக்க மானுகங்கொண்டோனும்
ஐவருடதேவியவள் அரிவைவனம்போனுளே
முத்திரிகைபோடப்போனீர் முடிமன்னர்வீடனைத்தும்
அன்றுஎடுத்துவந்த அடையாளப்பேழையடி
அடையாளமல்லவென்று அரசனுமேதுசொல்வான்
அந்தப்படிச்சொன்னுலும் அரிவையரைவைப்பதில்லை
தேனர்குழலியரை தீவளர்த்திதள்ளிவிடும்
அங்குதேசாதிபதி அதிகர்னர்கூறுகிருர்
ஆரமுலையாளும் ஆளனுப்பிபோகவிட்டு
வண்டார்குழலான் மருவோலைவந்தபின்பு
தேனர்குழலாளை தீவளர்த்திதள்ளிடுவோம்
தேசத்தழகுமன்னன் திரியோதனன்கேட்டு
எப்படிசொன்னுலும் இளங்கொடியைவைப்பதில்லை

## துரியன் கோபித்து அக்கினியை வளர்த்தச் சொன்னது

செம்பொன்மணியோரைத் தீக்குழிவெட்டுமென்ருர்
அக்கினியில்தள்ளிவிட்டு அரிவையிளமாதரசே
அத்திநகர்பட்டணத்தை ஆளாமல்விடுவதில்லை
வீண்வார்த்தைபேசாதே வேணமட்டுஞ்சொன்னுலும்
இளங்கொடியைவைப்பதில்லை என்னதான்சொன்னுலும்
தேனர்குழலாளைத் தீவளர்த்திதள்ளிடுவேன்
உத்தமர்கள்வீரியனும் ஊழியரைத்தானழைத்து
நித்திலங்குபூமுடியான் நியமத்தபேரெல்லாம்
அத்தண்டபேரையும் அழைத்தோடிவாருமென்ருன்
அத்தனைபேர்களும் அம்பலத்தில்வந்துநின்று
எங்களையழைத்தது யேதுவகைசொல்லுமென்ருர்
உங்களையழைத்தவகை ஒன்ருர்குறைவுமில்லை
அல்லிமருமகளை அக்கினியிற்றள்ளுதற்கு
அதனுலழைத்தேனென்று அரசனுக்குத்தெண்டனிட
அத்தனைபேருமாய் அம்பலத்தில்வந்துநின்று
எங்கேயையா தீக்குழிகள் எவ்விடத்தில்வெட்டுவது
அல்லிமருமகளை அக்கினியில்தானேற்ற
தேனர்குழலாளைத் தீயெறிக்கநான்பார்க்க
என்-ஆசாரவாசல்முன்னே அடரவேவெட்டுமென்ருன்

வெட்டிக்குழிபறித்தோர் வேந்தரந்தநாழிகையில்
தீக்குழிகளாச்சுதென்று தெண்டனிட்டாரூழியர்கள்
தீயைவளர்த்துமென்ருன் துரியோதிரப்பெருமான்
நித்திலங்குபூமுடியார் நிமித்தங்கர்னர்தான்கேட்டு
காவலாம்வீரியர்கள் காட்டகத்தில்வந்து நின்று
பட்டமரம்பார்த்துப் பரிவுடனேயெல்லோரும்
ஆச்சாவுந்தேக்கும் அழகாய்ப்பிளந்தடுக்கி
சந்தனத்தேக்குஞ் சதுராய்ப்பிளந்தடுக்கி
மூட்டினுர் தீயை முடிமன்னர்சொற்படிக்கி
வானமட்டுந்தீயும் வளர்ந்ததேமந்நேரம்
ஆகாயமட்டும் அக்கினிகள்தான்வளர்த்தி
தீக்குழிவளர்ந்ததென்று தெண்டனிட்டார்சேவகரும்
தேசத்தழகுமன்னன் திரியோதிரன்கேட்டு
காசிலிவர்னர் கர்னர்முகம்நோக்கி
அல்லிமருமகளை அக்கினியிற்றள்ளுதற்கு
அந்திப்பொழுதிலே அக்கினியிற்றள்ளுதற்கு
ஆரமுலையாளை அழைத்தோடிவாருமென்ருன்

அக்கினியில் கர்னர் விழப்போனது

காசிலிவர்னர் கர்னரதுகேட்டு
என்மேல்சந்தேகம் எழில்வீராகண்டாயோ
அக்கினியில்நானுமிப்போ ஐயாவேகுதிக்கிறேன்
என்று-வரிந்துகட்டிபச்சைவடம் மன்னரதிகர்னர்
தீக்குழியைச்சுற்றிவந்தான் றென்னன்பெருமானும்
அம்பலத்துசேனையெல்லாம் அடரக்கொலுகலைந்து
கட்டிப்பிடித்தார்கள் கர்னர்பெருமாளை
கொற்றவனும்வீரியனும் கோபந்தணிந்தபின்பு
தேசத்தழகுமன்னன் திரியோதிரன்பார்த்து
காசிலிவர்னர் கர்னர்திருமகனுர்
சிந்துநாடாளுகின்ற செல்வப்பெருமாளை
அல்லிமருமகளை அக்கினியிற்றள்ளுதற்கு
அந்தப்பொழுதிலே அக்கினியிற்றள்ளுதற்கு
ஆரணங்கையிப்போ அழைத்துவரச்சொல்லுமென்ருர்

தூதர்கள் கர்னர் புத்திரனுக்கு சொல்வது

உத்தமர்கள்வீரியனும் ஊழியபேர்தான்கேட்டு
சிந்துநாடாளுகின்ற செல்வப்பெருமானே

அவர்-ஆசனத்தின்கீழே அடிவணங்கிதெண்டனிட்டார்
நீ-யார்பணிதூதர் அரியவுரையுமென்றூர்
தேசத்தழகனவன் துரியோதனன்பணிதான்
வேறென்றுமில்லையையா வேந்தர்பெருமானே
உங்கள்-ஐயர்மேற்சந்தேகமாய் அரவக்கொடிவேந்தன்
கூறினூர்கண்டீரோ கொற்றபூமன்னவனே
அல்லிமருமகளை அக்கினியிற்றள்ளுவதற்கு
வானத்தளாவுந்தீயும் வளர்ந்ததுமன்னவனே
காரிழையாள்மாது கலந்தாரிநாயகத்தை
அக்கினியிற்றள்ள அழைத்துவரச்சொன்னூர்காண்

கர்னர் புத்திரன் சொல்வது

ஊழியப்பேர்தானுரைக்க உத்தமனுந்தான்கேட்டு
அல்லிமருமகளை அக்கினியிற்றள்ளிவிட்டு
ஆள்வானேபின்னிருந்து அத்திநகர்பட்டணத்தை
அறியாரோதானும் அல்லியுடசேவகத்தை
மதுரைதுரையாச்சியரை மணமாலைசூட்டவென்று
காசொன்றுநேராதோ காளையந்தஅச்சுதனூர்
முந்தியேவந்து முடிமன்னர்மாலையிட்டார்
மதுராபுரியாளை மணமாலைதான்சூட்டி
தேவேந்திரலோகம் சென்றூரேயருச்சுனனூர்
அப்படியல்லவே ஐவருடசேவகங்கள்
ஏழாம்வயதினில் எதிர்த்துவந்தநீன்முகனை
எட்டிமயிர்பிடித்து எடுத்தவுடல்பிளந்து
கோமானுதிரங் குதித்துகரையோடி
மன்னன்குடல்பிடுங்கி வனமாலைபூண்டுகொண்டார்
இவன்-அக்கினியில்தள்ளி அரசாளப்போறூனே
அன்று-பத்தினியைக்கொண்டுவந்து பாரச்சபைநடுவே
மாதினதுதுகிலாடை மானுகன்தானுரித்தான்
தக்கப்புகழுடைய தருமர்பொருத்திருந்தார்
அவன்பொறுத்ததுபோல் ஐவரின்றுபொறுப்பாரோ
ஐவர்பொறுப்பதில்லை ஆனந்தவாழ்மார்பா
நூலால்கடுந்திரளார் நூற்றுருவர்சேனையெல்லாம்
சேரக்கருவருப்பார் சேனைகளத்தனையும்
அத்திபுரப்பட்டணத்தை அடங்கலையுந்தானிடித்து

பருத்தியும்ஆமணக்கும் பஞ்சவர்களிடித்திடுவார்
பொரும்பொருமென்று பொற்கருணர்புத்திரரும்

### கர்னர் புத்திரன் கலந்தாரியை கண்டது

ஆரணங்குசேதி அறிந்துநான்வருவேனென்று
உத்தமவீரியனும் உட்கட்டைப்போய்புகுந்தான்
தாமக்கருங்குழலாள் தாதியெதிர்கண்டு
ஆதீனம்போட்டார்கள் அங்கிருக்குந்தாதியர்கள்
வந்துயிளப்பாறி மன்னன் திருமுகத்தை
தாதியைப்பார்த்து தார்வேந்தனேதுசொல்வான்
மாலைக்குழல்மாரேஎங்கள் மதனியரை நீரழையும்
ஆரணங்குமப்போது அழைத்தோடிவாருமென்றார்
தன்கைகவுரி தானெருத்திகைகொடுத்து
மங்கையரும்பள்ளிகொண்ட மண்டபம்போய்புகுந்து
காரிழையாள்மாது கலந்தாரிநாயகமே
அத்திபுரம்நகருக் காதீனத்துக்குடையவளே
தான்பிறந்தநாட்டுக்கு தானேயதிபதியா
முத்துஞ்சூழ்நாடு முழுதுமுடையவளே
மங்கையரேயும்முடைய மைத்துனனார்வந்ததுகாண்
காசிலிவர்னர் கர்னர்திருமகனார்
மாலைமுடியழகர் மண்டபத்தில்வந்திறங்கி
அழைத்துவரச்சொன்ன ரன்பானமைத்துனனார்
சொல்லுதற்குமுன்னமே தோகையெழுந்திருந்து
பூவணையைவிட்டு பூங்கிளியுந்தானிறங்கி
தாரார்குழலுடைய தாதிகள்தோளூன்றி
காரிழைமார்தாதியர்கள் கைலாகுதான்கொடுக்க
மெத்தெனவேதான்நடந்து வேல்புருவங்கண்ணாளும்
மைத்துனனார்வந்திருக்கும் மண்டபம்போய்புகுந்தாள்
மாலைமுடியானும் மதனிவரவுகண்டு
சிங்காதனத்தைவிட்டு திகழக்குதித்திறங்கி
மதனியார்பாதம் மலர்தூவிதெண்டனிட்டான்
வந்துபணிந்தவரை வாழ்த்தியந்தமங்கையரும்
கன்னியர்கள்மாலை கடுகிமணம்பெறுவீர்
வாழ்த்திடுவீரென்று மனங்குளிரவாழ்த்தினள்
இட்டதோராதீனத்தில் ஏறுமல்தானிருந்தான்

**கலந்தாரி சொல்வது**

அப்போகாரிழையாள்மாது கலந்தாரிஎதுரைப்பாள்
மைத்துனுநீருமிங்கே வந்தகருமமென்ன
மாலைக்குழலியரே மதனியரே நீர்கேளீர்
மதுரைப்பெருமானும் வந்ததுமில்லையென்று
தீயைவளர்த்தினுர் தேசத்தழகுமன்னன்
வானமட்டுந்தீய்கள் வளர்ந்ததுகாணந்நேரம்
ஆனைக்குழியகலம் அக்கினியும்வளருது
அக்கினியில்தள்ளவும் அழைத்துவரச்சொன்னுரே
ஆதலாலிங்குவந்தேன் அன்னக்கிளிமதனியென்ருன்
அவ்வசனங்கேட்டு அல்லிமருமகளும்
கட்டார்கருங்குழலாள் கலந்தாரியேதுசொல்வாள்
சீரியெறிபறந்து செங்கையற்கண்முத்தரும்பி
அல்லிமருமகளை அக்கினியில்தள்ளிவிட்டு
ஆள்வானேபின்னிருந்து அத்திநகர்பட்டணத்தை
அறியானேதானும் ஐவரதுசேவகத்தை
ஆணுலழகுடன்ன னர்ச்சுனராஜதுரை
மதுரைதுரைச்சியரை மணமாலைசூட்டவென்று
பூமியைவலமாக வருகின்றவேளையிலே
காசொன்றும்நேராதே காளையந்தவர்ச்சுனனுர்
தாலியும்நேராதே தார்வேந்தரந்நேரம்
மாதுகருங்குழலை மன்னவர்மாலையிட்டு
தேவேந்திரப்பட்டம் தேர்விசையராண்டாரே
அப்படியல்லவோ ஐவரதுசேவகங்கள்
காலங்கள்பின்பலவோ கபடர்கள்நூற்றுவர்க்கும்
ஏதுக்குதள்ளுகிருன் என்னைப்பெருந்தீயில்
என்னையிவன்தள்ள இவனுருநானுரு
யார்காணுமென்னை அக்கினியில்தள்ளுறவன்
காவலர்பாண்டவர்கள் காடுறைந்துபோனவர்கள்
என்-மாமன்மாரெல்லோரும் வனவாசம்போனுரே
என்-மாமிதுகில்விரித்து வனவாசம்போனுலே
என்-ஏற்றக்குறைச்சல் இளப்பமாய்தானடந்தால்
அவர்-தள்ளவறியாரோ ஐவர்சிகாமணிகள்
எனக்கு-நித்தமொருபட்டுடுத்தி நேரமொருபூச்சாத்தி
போதவொருபட்டுடுத்தி பொற்சரிகைப்பணிபூட்டி

மலரணையின்மேலே வளர்த்தாரேமன்னவனுர்
நான்-ஏற்றக்குறைச்சல் இருந்ததேயாமாஞல்
அவர்களறியாரோ அதிகர்னவீரியனே
அது-யில்லாதிருந்ததினுல் ஆனந்தவாழ்மார்பா
வாசலுக்குக்காவலாய் மைத்துனரே நீரிருந்தீர்
என்னையிவன்தள்ள இவனுலேதாஞமோ
தக்கப்புகழுடைய தருமராதுதம்பியர்கள்
பதினெட்டுநாள்பாரதம் படையெடுத்துவந்தாக்கால்
நூலால்கடுந்திரளார் நூற்றுவர்கள்பூமுடியும்
வீமர்கைதெண்டாலும் விஜயர்கையம்பாலும்
நாமக்குலவிளக்கு நகுலர்கைபாங்கிஞலும்
சகாதேவர்கையிலிருக்கும் சச்கரத்துவாளிஞலும்
துண்டந்துண்டமாகவே துணிக்கின்றபோதையிலே
கூறுகூருகவே குவிக்கின்றபோதையிலே
பிணத்தின்மேல்தானடந்து பெண்கள்மாரெல்லோரும்
நாளை-தலைமேலேகையைவைத்து தானழுதுமாதர்களை
தம்பிமார்பெண்களை தள்ளவேசொல்லுமென்ருள்

கர்னர் புத்திரன் சொல்லுவது

அவ்வார்த்தைகேட்டு அங்கராயன்புத்திரனும்
நாளை-துண்டுதுண்டாகவே துணிக்கிறபேராஞலும்
அரவக்கொடிவேந்தன் அஞ்சாஞெருநாளும்
மாலைக்குழலியரே மதனியரே நீர்கேளீர்
எங்களையுமல்லாமல் யெழில்நாகங்கொண்டோனும்
எம்மை-தள்ளுகைக்குவந்தாலே தருமமுடியோனும்
என்னசொல்வீர்மதனி யென்ருரேமன்னவனும்
நான்-சொல்லவரியேனே சுந்தரப்பூமுடியே
எதிரேயுத்தாரஞ்சொல்லி ரெடுத்துரைக்கமாட்டேனே
அஞ்சுவேனேசொல்லுதற்கு ஆனந்தவாழ்மார்பா
ஆர்காணுமென்னை யக்கினியிற்றள்ளுதற்கு
தம்பிமார்பெண்களை தள்ளுமென்றுசொல்லுதற்கு
அதற்குநானஞ்சுவேனே ஆணழகர்வீரியனே
அவ்வார்த்தைக்கேட்டு அங்கராயர்புத்திரனும்
மாலைக்குழலேயுன் மனதைநான்சோதித்தேன்
எதுக்குமஞ்சாதே இருமென்றுதானுரைத்தார்
அஞ்சிகையேன்காணும் ஆனந்தவாழ்மார்பா

ஒன்றுரெண்டல்லவே உத்தமர்கள்வீரியமே
ஐந்துஅடையாளம் ஆணழகர்தான்கொடுத்து
வாச்லுக்குக்காவலாய் மைத்துனரே நீரிருக்க
அஞ்சேனொருநாளும் ஆரணங்குயென்றுரைத்தார்

## கர்னர் புத்திரன் தூதனுக்குச் சொல்வது

ஏலங்குழலியரே இருமென்றுதானுரைத்து
அப்போதுதூதுவனும் அவ்விடத்தில் நின்றிருந்தான்
வந்ததொருதூதுவனே மன்னவனுந்தானழைத்து
அஞ்சிகையாகயிங்கே அல்லோருநாமிருக்க
அவளஞ்சவில்லைகாணும் அதிசயம்பேசுகிருள்
அவ்வார்த்தைசொல்லி அறிக்கையிடவந்தேனென்ருர்
அவ்வார்த்தைசொல்லவென்று அனுப்பிவிட்டுதூதுவ [னை
காவலிலேதானிருந்தான் கட்டழகனப்போது
அப்போதுதூதுவனும் அட்சணமேவந்து

## துரியோதிரன் வேதியரை யழையுமென்றது

தேசத்தழகுமன்னன் துரியோதிரன்கேட்டு
கண்கள்சிவந்து கடுங்கோபந்தானுகி
காசிலிவர்னர் கர்னரைத்தானழைத்து
வேதியர்கள்பெரியோரை வேந்தனேயழையுமென்ருர்
சாஸ்திரவாதிகளைச் சகலரையுமழையுமென்ருன்
வேதந்தெரிந்தவரை வேதியரையழையுமென்ருன்
அவ்வசனங்கேட்டு அதிகர்னர்தானெழுந்து
அரசன்சொல்கடவாமல் அந்தணரைத்தேடுகிருர்

## பெருமாள் வருகிறது

அந்ததொருவேளையிலே ஆயாவரறிந்தார்
அண்டமளந்ததொரு ஆதிநாராயணரும்
இதுதான்சமயமென்று யெம்பெருமாளப்போது
நல்லசகுனமென்று நாராயணரெழுந்து
சாஸ்திரந்தானறிய சதுர்மறைபோலாக
அறுபத்துநான்குகலை யாவுமுணர்ந்தவன்போல்
வேதங்கரைகண்ட வேதியர்போல்வடிவெடுத்து
மெத்தப்பெரியவராம் மேல்நாட்டுவேதியராம்
விருத்தக்கிழவராம் வெகுநாளாய்வாழ்பவராம்
தீரப்படித்தவராம் தெளிவறிந்தவேதியர்போல்

முற்றுமேகற்றவரும் முழுதுமறிந்தவரும்
தெண்டுபவுத்திரமும் திருமார்பில்பூநூலும்
தள்ளாதவேதியர்போல் தடியூன்றிவாருராம்
வாரதொருவேதியரை மன்னவனுந்தான்பார்த்து
எதிர்கொண்டுதெண்டனிட்டார் இயலானஅதிகர்னர்
தெண்டனிட்டகர்னரை சீர்பெறவேதான்வாழ்த்தி
வாழ்த்திவிடைகொடுத்து மறையவனுரேதுரைப்பார்
அஞ்சாதேகர்னரேநான் ஆதிமூலமாயவனுர்
இவ்வேஷங்கொண்டு இவ்வனத்தில்வந்தேன்யான்
கலக்கமனமுடைய கபடதுரியனுக்கு
ஆரூடஞ்சொல்லவந்தேன் அறிவழிந்தமன்னனுக்கு
ஆனதினுல்நீர் அஞ்சவேண்டாம்ராஜமன்னு
மதுரைதுரைச்சியவள் வளநாடிபுத்திரனும்
தன்தேவியண்டைவந்து தாமருவியவன்போனுன்
அடையாளமுந்தந்து ஆணழகன்தான்போனுன்
உன்மீதுசிந்தனைகள் உம்மைகொலுமன்னனுக்கு
சிந்தைகலங்கவே தெரிவித்தேன்கபடனுக்கு
அஞ்சாதேவாருமென்று அந்தணர்சொல்லுகையில்
கர்னர்அதுகேட்டு கண்கள்களிகூர்ந்து
ஆனந்தங்கொண்டு அடிவணங்கிதெண்டனிட்டு
கைலாகுதான்கொடுத்து கர்னரவர்கூடிவந்தார்

## துரியோதிரன் வேதியரைக்கண்டு மரியாதை செய்தது

மானுகன்கொண்ட மன்னன்கொலுமுகத்தில்
அந்தணர்வருகையிலே அரவக்கொடிவேந்தன்
தெண்டனிட்டவேதியர்க்குச் சிங்காதனங்கொடுத்தான்
குந்திஞர்வேதியருங் கொலுமகாமண்டபத்தில்
மற்றதொருமன்னவர் மகுடமுடிராஜாக்கள்
ஏகமாய்நிறைந்தார்கள் எங்குமிடமில்லாமல்
அப்போதுவேதியரும் அரசன்முகம்பார்த்து
எம்மையழைத்தது ஏதுவகைசொல்லுமென்ருர்
உம்மையழைத்தவகை ஒன்ருற்குறைவுமில்லை
அல்லிமருமகளை அக்கினியிற்றள்ளுதற்கு
நாளுமதுநல்லதாய் நாயகரேசொல்லுமென்ருன்

## வேதியர் ஆரூடஞ் சொல்வது

கண்டாரேவேதியரும் கபடனதுதன்னினைவை
கூறுவார்வேதியருங் கொடிநாகமன்னனுக்கு
அரசருக்குத்தக்கபடி ஆயரருளனுற்றூர்
அஸ்தநட்சத்திரம் ஆகாதநாளாச்சே
இன்றெட்டாநாளையிலே ஏந்திழையைத்தள்ளிடலாம்
ஊருக்குமொன்றுமில்லை வுனக்குங்குறைவுமில்லை
அக்கினியிற்றள்ளவென்றால் அதுக்குஇடமுமுண்டு
ஆற்றங்கரையோரம் அக்கினியைதான்வளர்த்தி
எட்டுநாளொருவாரம் எரிநெருப்புஆறாமல்
ஆகாசமட்டும் அடர்ந்துஎரியவிட்டு
பசுவினதுநெய்யாலே படரவெரியவிட்டு
தணியாமலக்கனியைத் தார்வேந்தர்காத்திருந்து
அன்றுடம்பிராமணற்கு அளவிறந்ததனங்கொடுத்து
கோதானம்பூதானங் கொடுத்துவரவேதியர்க்கு
யானைகுதிரைபசு அபாரியாய்த்தான்கொடுத்து
எட்டுநாள்சென்றபின்பு ஏந்திழையைத்தள்ளிவிடும்
அதனுடனேதோஷம் அபகரித்துப்போய்விடும்
எட்டாநாளின்னேரம் இவ்விடத்தில்நான்வருவேன்
கூடியிருந்துதள்ளிடுவோம் கொற்றவனேயென்றாராம்
அவ்வார்த்தைதான்கேட்டு அரவக்கொடிவேந்தன்
பூரித்திருதோளும் பொன்னங்கித்தான்சுழல
சந்தோஷங்கொண்டு சரீரங்கள்பூரித்து
வேதியரைப்பார்த்து வேந்தனெடுத்துரைப்பான்
இன்றெட்டாநாளையிலே இங்குவாரும்வேதியரே
என்றுமிவனுரைக்க ஏதுசொல்வார்மாயவனுர்
அப்படியேயாகுதென்று ஆயரவர்தானடந்தார்

## பெருமாள் அல்லியிடம் வருவது

காடுசெடிதாண்டி கரியமலைதான்கடந்து
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
சந்திரசூரியர்கள் காணுவனங்கடந்தார்
மானுமதுரையது வடமதுரைதாண்டிவந்தார்
தேனுமதுரையது தென்மதுரைநாடிவந்தார்
அல்லியரசானியது அரண்மனையில்வந்துவிட்டார்

பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகியும்
கண்டாளேவேதியரைக் கன்னியிளமயிலும்
வேதியரைக்கண்டவுடன் மெல்லியருந்தெண்டனிட
தெண்டனிட்டுமெல்லி செப்புவாளொருவார்த்தை
ஐயாபெரியவரே அறிவுள்ளவேதியரே
திரப்படித்தவரே தெளிவறிந்தவேதியரே
எந்தவூர்எந்ததேசம் எங்கிருந்திங்குவந்தீர்
சொல்லுமையாவேதியரே என்றாளேதோகையரும்
தூரம்வடக்கேயம்மா துவாரகாபுரிதேசம்
அத்திபுரத்திற்கு ஆரணங்குயான்போக
வழிகள்தெரியவில்லை மாதாவேயெந்தனுக்கு
தேசத்தழகுமன்னன் திரியோதிரப்பெருமான்
வீஷ்மர்துரோணர் விதுரனஸ்வத்தாமன்
கர்னருங்காங்கையருங் கனத்ததொருமெல்லியரும்
சிந்துபதிராஜாவாம் துற்சாதனமன்னன்
தம்பிமார்தொண்ணூற்று ஒன்பதுபேர்ராஜாவாம்
அவர்கள்-ஏகாந்தமாய்கூடி இராஜமன்னரெல்லவரும்
யாரோவோர்கன்னியாம் அவர்பேர்கலந்தாரி
தேன்மொழியாள்வயிற்றில் திருட்டுபிள்ளையுண்டாச்சு
ஆகையால்கன்னியரை அக்கினியில்தள்ளுதற்கு
கோதானம்பூதானம் கொடுக்கிறார்வேதியற்கு
வழிகள்தெரியவில்லை மாதாவேநான்போக
உந்தனைக்கேட்டுப்போக வந்தேன்காணுத்தமியே
என்றுமிவருரைக்க ஏந்திழையுங்கண்சிவந்து
சீறியெறிபறந்து செங்கையற்கண்முத்தரும்பி
ஆராடாகாவலரே அலங்காரமல்லர்களே
அந்தணர்பிராமணரை அரையிலடையுமென்றாள்
கேட்டார்பெருமாளும் கிளிமொழிவார்த்தைதன்னை
அகங்கார நீலியென்று ஆயர்மனமகிழ்ந்து
எடுத்தார்சுயரூபம் எம்பெருமாளாண்டவரும்
கண்டவர்கள்தானடுங்க கரியமால்ரூபமானார்
பார்த்தாளேயல்லியம்மாள் பாரளந்தார்வடிவமதை
மெத்தநடுங்கி மேனியெல்லாம்வேர்வையிட
வந்துபணிந்தாளாம் மாயவனார்பாதந்தான்
பணிந்துஎழுந்திருந்து பாவையருமேதுசொல்வாள்
என்சாமிஎன்குருவே என்னுடையகர்த்தாவே

ஆண்டவரே நீரிருக்க அடியாட்குயென்னகுறை
ஆறுதப்புநூறுபிழை அடியாள்யான்செய்ததெல்லாம்
அத்தனையும்நீர்பொறுப்பீர் ஆயர்பெருமாளே

பெருமாள் சொல்வது

அப்போதுபெருமாளும் அருளாளரேதுசொல்வார்
மலரிற்பிறந்ததொரு வாழ்வரசியல்லியரே
போரஞ்சாவீரன் புலந்திரனுர்தேவியரை
காரிழையாள்மாது கலந்தாரிநாயகியை
தீயிலேதள்ளுதற்கு துரியோதனன் நினைத்தான்
வேதியரையழையுமென்ருன் வேந்தன்கபடனவன்
அப்போதுவேதியர்போல் அவ்விடம்யான்யோனேன்
கலக்கமனமுடைய கபடன்துரியனுக்கு
ஆருடமொன்றுசொன்னேன் அறிவழிந்தமன்னனுக்கு
அஸ்தநக்ஷத்திரம் ஆகாதநாளென்றேன்
கேட்டையுமூலமுங் கெடுதிநாளென்றுசொன்னேன்
இன்றெட்டாநாளேமி லிசைந்தநாளென்றுசொன்னேன்
திங்கட்கிழமையது தசமிபுனர்பூசம்
அன்றையதினத்திலே அக்கினியைமூட்டுமென்றேன்
அப்படியேசெய்வதற்கு அரசனிருக்கிருனே
நீயென்னசொல்லுமென்ருர் நிகரில்லாயெம்பெருமாள்
என்னுலேயென்னவாகும் எம்பெருமாள் நீர்சொல்லும்
ஆனுலொருவயணம் அல்லியரேசொல்லுகிறேன்
உன்னைப்போல்பத்துபேரை உத்தமியைசோடித்து
நீபிடித்தசெங்கோலே நேரிழையாள்கைகொடுத்து
ஸ்ரீமந்தபழங்களை தேன்மொழியாள்கைகொடுத்து
புளியாறுவரவிடுவாய் பொற்கொடியாள்நாயகமே
அதுசமயம்நான்பார்த்து ஆகாயமார்க்கத்தில்
ஊசிபோலமின்னி ஒருநொடியில்மழைசொரிவேன்
குமுரியேபெய்யவைப்பேன் கொடிதானவக்கினிமுன்
அம்மையாறுநீர்பெருகி அணைத்துவிடுமக்கினியை
அரசனதுசேனையெல்லாம் ஆற்றில்மிதப்பார்கள்
அதுசமயம்நீபார்த்து அனுப்பிவிடுந்தாதிகளை
ஆயுதங்களைக்கைகொடுத்து அனுப்பிவிடுந்தாதிகளை
சேனைகளையெல்லாஞ் சிதறவடித்துவிடு
என்றுசொல்லிமாயவனு ரெழுந்திருந்தாரப்போது

அப்படியேநல்லதென்று அல்லியருந்தானிருந்தாள்

### வேதியர் அத்திபுரம் வந்து சேர்ந்தது

அடியளந்தயெம்பெருமாள் ஆதிமூலமாயவனார்
மதுராபுரிகடந்து வையைவளநாடுவிட்டு
காடுசெடிகடந்து கானாறுதான் துலைத்து
பொல்லாவனங்கடந்து போய்ச்சேர்ந்தாரத்திபுரம்
தேசத்தழகுமன்னன் துரியோதனனிடத்தில்
வந்துவிட்டார்வேதியரும் மாபாவியம்பலத்தில்
கண்டானேவேதியரை கபடன் துரியோதனன்

### துரியோதிரன் சொல்வது

ஐயாபெரியவரே அன்பானவேதியரே
முப்பத்திரண்டறமுஞ் செய்தேன்காண்வேதியரே
யானைகுதிரை அபாரியாய்நான்கொடுத்தேன்
கோதானம்பூதானம் கொடுத்தேன்காண்வேதியரே
ஆற்றங்கரையோரமது அக்கினியைவளர்த்திவிட்டேன்
எட்டுநாளாகவே எரிகிறதேஅக்கினிதான்
இனறேடேகெடுவாச்சு எழிலானவேதியரே
ஆச்சுதுநாளென்றாள் அரவக்கொடிவேந்தன்
அட்சணமாயவனும் அவன்சேதிதான்கேட்டு
சரியாச்சுமன்னவனே தனஞ்செயனேராஜேந்திரா
உன்மனதுபடிசெய்ய ஆதிமறையவனுருரைக்கையிலே

### துரியோதிரன் கர்னரை யழைத்துச் சொல்வது

தேசத்தழகுமன்னன் திரியோதிரப்பெருமான்
ஆரடாதுதுவனே அழையடாகர்னரைத்தான்
அவ்வசனங்கேட்டு அத்தூதனோடிவந்து
காசிலிவர்னர் கர்னரைத்தானழைக்க
அம்பலக்கச்சேரி அதிகர்னர்வந்துநின்றார்
கர்னரைத்தான்பார்த்து கபடனவனேதுசொல்வான்
கேளுங்காண்கர்னரே கெடுவுகளுஞ்சரியாச்சு
தாரார்குழலை தனைலுக்கழையுமென்றான்
கடுகவரவழையும் கலந்தாரிநாயகத்தை
என்றுமவனுரைக்க ஏங்கிமனந்தளர்ந்தான்
வேதியரைக்கண்டார் வேந்தனதிகர்னர்
கண்சைகைகாட்டினார் கரியமாலெம்பெருமாள்

கர்னர் கலந்தாரியிடம் வருவது

அந்ததொருகண்சிமிட்டை அதிகர்னர்தான்பார்த்து
கடுகியெழுந்தார் கன்னியின்றன்கோட்டைக்கு
மாதரசிகோட்டைக்கு மன்னவனும்வந்துவிட்டான்
கலந்தாரியரண்மனைக்கு கட்டழகனுட்புகுந்து
தாதிமார்கண்டு தையலர்களோடிவந்து
காலுக்குநீர்வார்த்தார் கவரியாரவீசினர்
பாதத்தில்தான்பணிந்தார் பாவையழகியரும்
தன்னைப்பணிந்த தாதிமுகம்நோக்கி
மாதுகருங்குழலை வரவழையுமென்றார்
கலந்தாரிநாயகத்தை கடுகவழையுமென்றாள்
ஓடிவந்தாளுட்புகுந்தா ளுத்தமிக்குதெண்டனிட்டு
ஆச்சியரேயும்மை யருமையாய்தான்வளர்த்த
ஊட்டிவளர்த்தெடுத்த வுன்னம்மான்மார்வந்தார்காண்
அழைத்துவரச்சொன்னார் அம்மானதிகர்னர்
அவ்வசனங்கேட்டு அரிவையெழுந்திருந்து
பூஞ்சிலம்புதண்டை பொன்னுபரணமின்ன
காரிழையாள்மாது கலந்தாரிநாயகமும்
மாயவனார்சீர்பாதம் வணங்கியேநமஸ்கரித்தாள்
வாழ்வீர்வளருவீர் மண் ணாழிகாலமட்டும்
கற்பதித்ததூண்போல் கலங்காதரசாள்வீர்
எழுந்திருமென்று இன்பமுடன்தான்வாழ்த்த
எங்கேவந்தீர்எங்கேவந்தீ ரெனவளர்க்குமாமாவே
வந்தவிபரத்தை மாமாவேசொல்லிமென்றாள்

கர்னர் சொல்வது

தேசத்தழகுமன்னன் துரியோதிரப்பெருமான்
அக்கினிவளர்த்தி அனல்பாயவுங்களம்மான்
வரவழைத்தாருன்மை மாதுகருங்குழலே
வெகுகோடிமன்னன் வேந்தர்கடைநெருங்க
சகலோருங்காண சந்தடிநெருங்குது
வேதபிராமணரும் விளங்குகிறாரவ்விடத்தில்
சீக்கிரமாய்வாருமென்று சீரானவடையாளம்
கொடுத்தாரேகர்னர் கோதையவள்கைதனிலே
வாங்கினளடையாளம் மலர்கரத்தைதான்நீட்டி
அரண்மனைதாதியர்கள் அனைவோரும்தான்பார்த்து

ஆச்சியரேயுமக்கு அமர்ந்தது தீய்களென்பார்
தீய்க்கோ நீபிறந்தாய் தேன்மொழிநாயகியே
அக்கினிக்கோ நீபிறந்தாய் ஆரமூலையாளே
கொழுந்துவிட்டெரியுது கொம்பனைக்குபெருந்தணலு
செந்தணலுக்கென்று செழிந்து நீதான்வளர்ந்தீர்
இதுதானோகண்டபலன் என்றழுதார்தாதியர்கள்

கலந்தாரி சொல்வது

காரிழையாள்மாது கலந்தாரியேதுசொல்வாள்
அழுததொருபெண்களே ஆரணங்குகையமர்த்தி
கேளுங்கள்தாதிகளே கிளிமொழியாளென்வசனம்
கணவன்றனைச்சேர்ந்த கன்னியருமெய்யானல்
சோரத்தனமில்லாமல் சுந்தரனே நிஜமானல்
தீக்குழிக்குத்தப்புவேன் திசையெட்டுந்தானறிய
அக்கினிக்குத்தப்புவேன் அஷ்டதிசைதானறிய
இதுதானேஎன்னுடைய இருதயத்து நிண்ணயங்கள்
எல்லோருமறியட்டும் ஏந்திழையாள்செய்தகுற்றம்
என்று–ஆற்றினள்தாதியரை அல்லிமருமகளும்
ஸ்நானங்கள்செய்து செபதபங்கள்தான்முடித்து
சொக்கரைத்தானினைந்து திருநீறுதானணிந்து
மஞ்சள்துயிலுடுத்தி மடியில்வைத்த அடையாளம்
கோடாலிமுடிசியிட்டு குடமல்லிதானணிந்து
சீரானநெற்றியிலே திலதங்கள்தானுமிட்டு
பட்டுடுத்திபணிபூண்டு பதுமைபோலலங்கரித்து
தோழிமார்கூட்டம் சுற்றிலும்நெருங்கிவர
தாதிமார்கூட்டம் தன்னைநெருங்கிவர
மாமனதிகர்னர் மன்னன்படைநெருங்கிவர
காவலர்படைகளது கன்னியர்நெருங்கிவர
குடைகளிருபுரமும் கொம்பனையைநெருங்கிவர

தீக்குழிக்கு வருகிறது

கோட்டையைவிடுக்க கொம்பனையாள்வெளியானள்
சந்திரனைக்காணுத தங்கைவெளிப்பட்டாளாம்
சூரியனைக்காணுத தோகைவெளிப்பட்டாளாம்
கால்பீலிகலகலென்ன கைவளையல்பளபளென்ன
நெற்றிசுற்றி நின்றிலங்க நீலவிழிமைதுலங்க

கோட்டைகடந்து கொத்தளமுந்தாண்டி
ஆற்றங்கரையோரம் ஆரணங்குவருகையில்
ஏறிட்டுப்பார்த்தார்கள் எங்குமகாஜெனங்கள்
கங்கைகரைகொள்ளாத கனமானசேனைதிரள்
எங்கெங்கும்நிறைந்திருப்பார் எள்ளுவிழஇடமுமில்லை
அக்கினிபெருந்தனலும் ஆவிகள்பொருக்கிலையே
மெத்தப்பயந்தாள் மேனிகருகிவிட
மேகைபடங்கப்புது பூமிகள்தெரியவில்லை
அக்கினிசுடராலே ஆற்றமுடிகூடவில்லை
தவித்துமிகப்போகுது தணலேன்றபெருஞ்சுடரால்
அக்கினிச்சுடராலே அருந்தாகந்தானெடுத்து
நாவுவரண்டது நாடுநாவிநீருபற்றி
ஆவலாய்வந்துநின்றாள் ஆற்றுநீர்தான்குடிக்க
அந்தவொருவேளையிலே ஆயனுந்தான்பார்த்து
மாய்கையொன்றுசெய்தார் மாயன்பெருமாளும்
ஊசிபோல்மின்னி உரிபோலேகாலிரங்கி
இருண்டதுமேகம் எங்குங்கறுகறுத்து
ஆனைதும்பிபோலே அமர்ந்துவருஞ்சலம்போலே
சோனைமழைமாரி சொரியுதுஅன்னேரம்
வானமலர்மாரி வருஷிக்குமந்நேரம்

### அல்லி புளியாறு அனுப்புதல்

ஆறுஜலமெடுத்து அணிமதுரை நாயகியாள்
எம்பெருமாள்சேதி இதுதான்தருணமென்று
மதுரைப்பெருமாளும் வைகையிலேவந்துநின்று
தவனப்புளிகளை தையல்கறைச்சிவிட்டாள்
இச்சையாய்புளிப்பு இனிபுளிப்புதோன்றையிலே
அள்ளிக்குடித்தாளாம் அங்கமதுதான்குளிர
திரேகங்குளிர்ந்தது தேன்மொழிக்குஅந்நேரம்
தெளிந்தமுகமானாள் திருவழகிபூமாது
கர்னர்திருமுகங்கள் களையழகுதான்பூண்டார்
இந்தரகசியங்கள் யாவருக்குந்தெரியாது
அந்தசமயத்திலே அமர்ந்துமழைபொழியையிலே
தேசத்தழகனவன் துரியோதிரன்பார்த்து
கடுகவரச்சொல்லுமென்றான் கலந்தாரிநாயகத்தை
அப்போயிளம்பிறையா ளதுக்கொன்றுமஞ்சாமல்

அச்சுதரைத்தானினைந்து அரிவையவள்முகமலர்ந்து
ஆற்றுநீர்தான்பொசிந்து அருந்தாகந்தானருந்தி
அக்கினிக்குழியருகே அரிவையரைக்கொண்டுவந்தார்
தீக்குழியைத்தேடித் தேன்மொழியாள்வந்துநின்றாள்
கண்டார்களெல்லோரும் கன்னியவள் நிற்கையிலே
அந்தசமயத்தில் ஆயர்கிருபையினால்
பெரியாறுபெறுகிறது பெருவெள்ளமோடுகுது

அல்லி பெண்களை யனுப்புதல்

அம்பைப்பெருகி அலைமோதும்வேளையிலே
மதுரைவளநாட்டியவள் மயிலணையாளல்லியரும்
எம்பெருமாள்சொன்ன எண்ணத்தைதானினைந்து
இதுதான்சமயமென்று இப்போதேதள்ளிடுவார்
ஆரடிதாதியரே அதிகாரிசெங்கமலம்
இதுதான்சமயம் ஏந்திழையேவாடியென்றாள்
அவள்-பொல்லாத நீலி வல்லாண்மைகாரியவள்
ஏனம்மாவென்று ஏந்திழையாள்வந்துநின்று
சிங்காரஞ்செய்தாள் செங்கமலதாதியரே
மகுடமுடிசூட்டி மாணிக்கப்பதக்கமிட்டு
வச்சிரகபாயணிந்து மாணிக்கமாலையிட்டு
காலில்விருதுகட்டி கண்டாமணிதரித்து
ஆழியுஞ்செங்கோலும் அவள்கையில்தான்கொடுத்து
பாண்டியவள்வாழும் பரிசைகளுந்தான்கொடுத்து
முதாரிக்கையிலிட்டு முதுகிலேடோலணிந்து
அல்லியரைப்போலே அவளையலங்கரித்து
அஞ்சாதேபெண்ணரசே அல்லியரும்நானென்று
என்பெயரை நீதரித்து தட்சணமே நீபோமி
ஆரடாஎன்மருமகனை இத்தீயிற்றள்ளுபவன்
கொடுக்கிறேன்பூசை குடுமிதலையுருள
அதிகாரிநானிருக்க ஆரடாதள்ளுபவன்
அந்தப்படியாக அவன்படையில்போய்விழுந்தாள்
இந்தப்படியாக எச்சரித்துநீபோமி
அசட்டையாய்நிற்பார்கள் அல்லியிவளென்று
அடையாளந்தான்கொடுத்து அல்லிதிருமகனார்
சேர்ந்துயிருந்ததுவும் திருவாழிகொடுத்ததுவும்
வந்ததும்போனதும் வயணமாய்நீயுரைத்து

காரிழையாள்மாது கலந்தாரி நாயகிக்கு
மாதாங்கியழைத்துப்போய் கன்னியிட கோட்டையிலே
அரண்மனையிற்கொண்டுபோய் ஆரணங்குபெண்மயிலே
லச்சைகள் தீர்த்து மனதைமகிழவைத்து
இன்னஞ்சிலநா ளேந்திழையேசென்றபின்பு
பாண்டவர்வந்து பதியமர்ந்தபிற்பாடு
வெற்றிமதயானை வீமரது தண்டாலே
நூற்றுவர்பூமுடியை நொடியில் துணித்தபின்பு
அழைத்துக்கொண்டுபோரூ மஞ்சாதேயென்றுசொல்லி
தேறுதலைசொல்லி செங்கமலம்வாருமென்ருள்
அப்படியேநல்லதென்று அரிவையிவள்சொல்லையிலே

### செங்கமலம் வருகிறது

பயணங்களானுள் பைங்கிளியாள்செங்கமலம்
கூட்டியிருப்பதுபோல் கொம்பனைமார்சேர்ந்தார்கள்
ஆயுதவரிசையுடன் அநேகம்பேர் துணையானுர்
பாங்குகளும்பல்லயமும் பரிசைகளுங்கத்திகளும்
ஈட்டிகளும்அம்புகளும் எதிர்த்துகுத்துஞ்சூலங்களும்
வளைதடியுஞ்சக்கரமும் மங்கையர்கைபிடித்து
இவ்வளவுபேர்களையும் ஏந்திழைக்குத்துணையாக்கி
மருமகட்குதானுகந்த வரிசைகளுந்தான்கொடுத்து
மேளமும்பேரிகையும் விருதுகளுந்தான்கொடுத்து
ஆற்றிலேதெப்பங்கட்டி அதன்பேரில்தானேற்றி
போய்வாங்களென்று பொற்கொடியுமனுப்பிவைத்தாள்
தெப்பமரத்தின்மேல் தேன்மொழிமார் நானேறி
சகலவிருதுடனே தையலர்கள்வாரார்கள்
கரைபுரண்டவெள்ளம் கனத்துமுன்னேட
அந்தச்சமயத்தில் அச்சுதரும்பார்த்திருந்தார்

### கலந்தாரி தீயைச்சுற்றி வருவது

அக்கினியில்வந்துநின்ருள் அரிவைகலந்தாரி
சுற்றிவரச்சொன்னுர்கள் தோகையிளமயிலை
தலைமேற்கரங்குவித்து தையலருஞ்சுற்றிவந்தாள்
தள்ளுமென்ருன் தீயில் சர்ப்பக்கொடிவேந்தன்
விழப்போகுஞ்சமயத்தில் வெள்ளம்புரண்டதுவே

**ஆறுபெருகி அக்கினியைத் தணித்தது**

ஆயர்கிருபையினல் ஆறுபுரண்டதுவே
ஆகாயகெங்கை அலைமோதிவந்ததுவே
புரண்டோடிவெள்ளம் பெருந்தணல்விழுந்ததுவே
கட்டையுந்தீயுங் கனத்துமிதந்ததுகாண்
அக்கினிதணிந்தது ஆறுமெள்ளவோடுதுகாண்
படர்ந்ததேவெள்ளம் பார்மன்னர்மீதிலேதான்
சிலபேர்மிதந்தார்கள் சிலபேர்முறிந்தார்கள்
வேடிக்கைபார்த்தவர் மிதக்கிருர்கங்கையிலே
உயிரிழந்துபோனவரும் ஓடியேபோனவரும்
கரையேறிபோனவரும் காலோட்டம்பிடித்தவரும்
சிதறிவிழுவாரும் சீவனுயிர்போனவரும்
அலறிவிழுந்தவரும் அக்கரையேபோனவரும்
திக்குத்தெரியாமல் திசைகெட்டுப்போனவரும்
அறியாமல்வந்தோம் ஆற்றுக்கிரையாக
தெரியாமல்வந்தோம் சீவன்பரிகொடுக்க
ஒருவர்போனவழி ஒருவர்க்குந்தெரியாமல்
மூலைக்குமூலை முறிந்துக்கொண்டுஓடுகிருர்
அரிவைகலந்தாரி அசையாப்பதுமையைபோல்
ஆயன்கிருபையினல் அவ்விடத்தில்தானிருந்தாள்
கைகுவித்தபடியாக கன்னியரும்தானிருந்தாள
ஆறுபெருகிஜலம் அதனைச்சுற்றிஓடுகுதாம்
கர்னரும்நின்றிருந்தார் கனத்தபெருவாற்றில்
மற்றவர்களெல்லாம் மாண்டதுவும்பிழைத்ததுவும்
மூர்ச்சைகளானவரும் மெய்மறந்துயோனவரும்
வயறுயெரிந்தவரும் மண்மேல்விழுந்தவரும்
களைபட்டுப்போனவரும் கண்பிதுங்கிப்போனவரும்
திகிலடைந்துபோனவர்கள் திசைமாறியோடுகிருர்

**மதுரைப் பெண்கள்வந்து நெருங்கினது**

அந்தச்சமயத்தில் ஆற்றங்கரையோரம்
பெண்படைகள்நெருங்க பேரிகைவாத்தியங்கள்
முரசுகளடிபடவே முறையமிட்டபேரிகைகள்
டங்காரமுழங்கவும் தவுண்டுமல்லாரிகொட்ட
சற்சரிகைவீணைகளுந் தாக்கிமுரசறைய
அடிபடுதுராயபேரி அடிவானத்திடிபோல

கோடைகாலத்திடிபோல தலிமதுரைபெண்களெல்லாம்
ஆரடாயென்னுடைய அருமைமருமகளை
இந்திரனார்தேவியரை என்னுடையகண்மணியை
ஆசைமருமகளை அக்கினியிற்றள்ளுபவன்
அவன்-ஆண்மையும்வீரியமும் அறிகிறேன்பாரென்று
தெப்பமரத்தைவிட்டு தேன்மொழியார்வந்திறங்கி
படைகளுடனேபெண்கள் பதறிவிழுந்தார்கள்
ஓடுகிறஜனங்களை ஒருமிக்கத்துரத்துகிறார்
கொக்குத்திரளிலே இராஜாளிபுகுந்ததுபோல்
புலியின்கூட்டத்திலே போய்விழுந்தசிங்கம்போல்
வந்துவிழுந்து மாட்டுகிறார்பெண்களெல்லாம்
யானைப்படைக்கஞ்சாத அல்லியின்தாதியர்கள்
பாலாவு பரிசைகளும் பாங்குபிடியம்புகளும்
ஈட்டிசுழட்டுவதும் எகிறிக்குதிப்பதுவும்
பாலாதிருப்புவதும் பக்கத்தில்குத்துவதும்
பாங்குசுழட்டுவதும் பாய்ந்துமேகுத்துவதும்
கத்திசுழட்டுவதும் கவ்விவிழுவதுவும்
சிறுத்தைபோலாடுவதும் சேரவந்துகுத்துவதும்
எகிரிக்குதிக்கிறதும் எச்சரித்துமாட்டுவதும்
இந்தப்படியாக இசைந்துமேசேனையெல்லாம்
மூலைக்குமூலை முறிந்ததேசேனையெல்லாம்
இதுயென்னவதிசயம் இவர்கள்யார்பெண்படைகள்
மதுரைதுரைச்சியவள் மயிலனையாள்வந்துவிட்டாள்
இனிபிழைக்கப்போரேமோ இவள்கையில்தப்புவமோ
மட்டடங்காபெண்ணரசு மதியாளொருவரையும்
இன்றைக்கிருக்கிறேமே இவள்கையில்மாண்டிடுவோம்
தாட்சண்யமெண்ணுளே தயவுடனேபாராளே
எப்படியென்றுசொல்லி இரடிவிழுவாரும்
ஆயுதத்தால்காயப்பட்டு அலறிவிழுவாரும்
ஆற்றுக்குத்தப்பியே ஆருயிர்பிழைத்துவந்தோம்
கூற்றுவன்போலே கொல்லவந்தார்பெண்களென்று
பல்லைத்திறப்பார்கள் படுக்கையாய்விழுவார்கள்
முன்னேடுகிறவன்பின்னே முட்டுவானிவன்றலையை
ஓடிநின்றுபார்ப்பார்கள் ஒருவர்பின்னே நுழைவார்கள்
கால்மாடுதலைமாடாய் கதறிவிழுவார்கள்
இந்தப்படியாக இறைஞ்சுதுசேனையெல்லாம்

அல்லியைப்போலே அதிகாரிசெங்கமலம்
மன்னவராய்ப்பார்த்து மாட்டுகிருள் நல்லதப்பை
சின்னங்களானுர் துரியோதனன்படைகள்
அப்போதுமாயவனுர் அச்சுதனுர்கோபாலர்
அறியாதுபோலே ஆனந்தமாகஐயர்
குஞ்சிரிப்புகொண்டு கோபாலர்பார்த்திருந்தார்
அங்குதேசாதிபதி அதிவீரன்கர்னனும்
ஆறுபெருகினதும் அல்லிப்பெண்கள்சொல்கிறதும்
அதிசயம்போலே அதிவீரன்கர்னனும்
கட்டார்கருங்குலாள் கலந்தாரிநாயகியும்
சிரித்தமுகத்துடனே தேன்மொழியும்பார்த்திருந்தாள்
பெண்கள்திறமையைப் பூரிப்பாய்நகைத்திருந்தாள்
என்னை-அரசாளும்நாயகியாள் ஆதரிக்கவந்தாரோ
என்றுமனம்பூரித்து ஏந்திழையும்பார்த்திருந்தாள்

## துரியோதிரன் எண்ணமிட்டது

தேசத்தழகுமன்னன் துரியோதனப்பெருமான்
எண்ணுவான்கோடிசிந்தை இராசன்கபடனவன்
அக்கினிவளர்த்ததும் அவலமாய்ப்போனதும்
வெள்ளம்புரண்டு வெகுபேர்மிதந்ததும்
சகிக்கமுடிகொள்ளாமல் தானேடிவந்ததுவும்
மதுரைப்படைபெண்கள் வந்துமிகச்சாடுவதும்
வெட்கங்கெட்டுநின்றதுவும் வேந்தர்களோடினதும்
சின்னங்கள்பட்டதுவும் சேனைகளோடினதும்
விருதாவாய்திரவியங்கள் வீண்செலவானதுவும்
மங்கைகலந்தாரி மனங்கலங்கிநிற்பதுவும்
திரவியங்கள்போனதல்லால் சின்னங்கள்பட்டதுவும்
கிழப்பார்ப்பான்சொன்ன கெடுதலைவார்த்தைகளும்
அடையாளங்கண்டிருந்தும் அக்கினிவளத்தினதும்
இதுகளெல்லாம்பார்த்து ஏங்கிமனங்குன்றி
பெருமூச்சுவிட்டான் போனதுரியனவன்
குன்றினுன் துரியனவன் குருடன்திருமகனுர்
அறியாமற்செய்தோம் அல்லிமருமகளை
இடுக்கங்கள்வந்துதே இந்திரன்தேவியினல்
மிதமிஞ்சிபோயிற்றே மெல்லியவளஞ்சாளே
பாராமற்போனேமே பவிசுகுலைந்துபோனேமே

கண்டோர்நகைக்க கனத்தவுடலெடுத்தேன்
பார்த்தோர்நகைக்க பரிகாசமாச்சுதென்று
குறியாகப்பார்த்தான் கோதையர்திருவழகை
அல்லியவளல்ல அதிகாரம்பெற்றுவந்தாள்
அல்லியெனும்மதியால் அடையாளம்பெற்றுவந்தாள்
மூத்திரையுஞ்செங்கோலும் முடியும்தரித்துவந்தாள்
இவள்கையில்மாண்டார்கள் எண்ணத்தொலையாது
அவள்வந்தாளானால் யார்தப்பப்போருர்கள்
வெள்ளாட்டிகைதனிலே வெட்கங்கள்கெட்டோமே
தாதியவள்கையிலே தலையிரக்கமானேமே
தாதியரைதான்வணங்க தலைவிதியோயெந்தனுக்கு
யாரைக்கொண்டுமன்னிப்போம் அந்நீதிமாய்மாளுகுதே

## துரியோதனனுக்கு சொல்வது

என்று துரியோதிரனும் இருதயந்தான்கலங்கி
மன்னர்கர்னரை வாவென்றுதானழைத்தான்
கர்னர்பெருமாளும் கடுகெனவேவந்துநின்ருன்
கர்னர்முகம்நோக்கி கபடனுமேதுசொல்வான்
நீர்-சொன்னதுமெய்யாச்சி சூதாய்முடிந்ததுகாண்
அடையாளக்குறிப்பைநான் ஆராய்ந்துபார்க்காமல்
வீண்பழியுன்மீதில் விருதாவாய்சுமத்திவைத்தேன்
இப்போ-அல்லிமுடிதரித்து ஆழிசெங்கோல்கைபிடித்து
அடையாளந்தன்னுடனே அதிகாரம்பெற்றுவந்தாள்
இப்போதெரிந்தது இந்திரனூர்வந்தாரென்று
விருதாவாய்ப்பெண்கள் வீணுகச்சொல்லுகிருர்
ஏன்நமக்குப்பழிபாவம் ஏந்திழைமார்தன்னுடனே
வந்ததொருபெண்களுக்கு வயணமாய்நீருரைத்து
சமாதானஞ்செய்து சாந்தகுணமாக்கி
கோபத்தையடக்கி கொம்பனைமார்தன்னுடனே
அல்லிமருமகளை அரிவையர்கள்தன்னுடனே
கூட்டியுறவாக்கி கோட்டையிலேகொண்டுசென்று
செல்வமுஞ்சீரும் சிறப்புகளுந்தான்செய்து
அவர்கள்நடைப்படிக்கு அன்புடனேநீர்செய்து
திட்டப்படுத்தும் சீர்கர்னர்மன்னவரே
போமென்றுசொல்லி போர்வேந்தன்தானடந்தான்

### கர்னர் பெண்களைக் கண்டது

அப்போதுகர்னர் அதிகமனமகிழ்ந்து
அச்சுதரண்டையிலே அறிக்கையிட்டார்கர்னரவர்
இருவருங்கூடி எதிர்வந்தபெண்கள்முன்னே
வந்தெதிரே நின்றார்கள் மங்கையர்கள்முன்னே
ஏறிட்டுப்பார்த்தார்கள் ஏந்திழையாள்தாதியர்கள்
மறையவர்கர்னருக்கு வணங்கியேதான்தொழுதாள்
வந்துபணிந்த மங்கையரை தான்வாழ்த்தி
பொறும்பொறும்கோபங்கள் பொற்கொடியேமாதரசே
பட்டால்தெரியும் பாரகுணமில்லாதார்
கெட்டால்தெரியாமல் யாரோயெவரோவென்று
தெரியாமல்செய்தான் திரியோதனப்பெருமான்
ஆழிக்குஞ்செங்கோற்கும் அதற்காகப்பொருத்தருளும்
வாருங்கள்தாதியென்று மன்னவர்கள்தானழைக்க
கோபந்தணிந்து கொம்பனையாள்செங்கமலம்
குளிர்ந்தமுகமாகிக் கொம்பனைமார்தானடந்தார்
கர்னருமாயவருங் கட்டழகிமாரெல்லோரும்
பூஞ்சிலம்புதன்னுடைய பொற்கொடியாள்கலந்தாரி
அண்டையில்வந்தார்கள் அனைவருமப்போது
ஆயற்குங்கர்னருக்கு மடிவணங்கிதான்தொழுதாள்
அடிபணிந்தமங்கையரை ஆயனுந்தான்வாழ்த்தி
கற்புமிகுந்தவளே கன்னியரே நீர்வாழி
வாழ்த்திவிடைகொடுத்தார் மாயவனுரெம்பெருமாள்
வந்ததொருதாதியுடன் மகுடமுடிதான்பார்த்து
அத்தைமகுடமென்று அடிபணிந்துதெண்டனிட்டாள்
வந்ததொருபெண்களெல்லாம் மயிலணைக்குதெண்டனிட்டார்
அப்போதுசெங்கமலம் அல்லிமருமகளை
நாடாளுங்கன்னியவள் நாயகியாளென்றுசொல்லி
கலந்தாரிநாயகிக்கு கட்டழகிதெண்டனிட்டாள்
செங்கமலதாதியரைச் சீர்பெறவேவாழ்த்தி
ஆலிங்கனஞ்செய்து அல்லிமருமகளும்

### கலந்தாரி கோட்டைக்கு அழைத்து வருகிறது

எல்லோருமாய்க்கூடி இசைந்துநடந்தார்கள்
கன்னியுடகோட்டைக்கு கடுகிநடந்தார்கள்
காவலுக்குள்நுழைந்தார் கலந்தாரிகோட்டையிலே

கர்னர் திருமகனுங் கண்டுதொழுதானும்
எல்லோருங்கூடி ஏந்திழையாள்கோட்டையிலே
உள்ளே நுழைந்தார்கள் உட்கட்டரண்மனையில்
தாயாரந்ததுற்சடையாள் தையலரும்வந்துவிட்டாள்
பேரால்மிகுந்த பெருந்திருவாள் நாயகமும்
அனைவரும்வந்தார்கள் அன்புடனேவாழ்த்தி
ஆலமெடுத்தார்கள் ஐந்நூறுதாதியர்கள்
திருஷ்டிகழித்தார்கள் செல்வதியாள்மங்கையர்க்கு
அவரவர்களாசனத்தில் அமர்ந்தார்களெல்லோரும்
ஆயன்பெருமாளும் அமர்ந்தார்சிங்காசனத்தில்

## சீமந்தஞ் செய்தது

மதுரையிலேதானிருந்து வந்தவந்தபெண்களெல்லாம்
சீமந்தஞ்செய்வதற்கு சிந்தையிலேதானெண்ணி
கட்டார்கருங்குழலாள் கன்னியரையலங்கரித்து
பொன்சரிகைசேலையால் பூவையரையலங்கரித்து
ஆடையணிந்து ஆபரணமேசாத்தி
சாந்துசவ்வாதுகளை சரீரத்தில்தான்பூசி
களபகஸ்தூரிகளை கலந்துமிகப்பூசி
மங்களகரமாக மயிலணையையலங்கரித்து
பேடைமயிலனையாள் பெண்மயிலைக்குந்தவைத்து
மாமியார்வரிசையென்று மசக்கபண்டங்களெல்லாம்
வரிசையுடன்தான்கொடுத்து மயிலணைமாரந்நேரம்
அல்லிதிருமுடியும் அழுத்தியசெங்கோலும்
மோர்பெற்றமுத்திரையு மொய்குழலாளண்டைவைத்து
வந்துபணிந்தார்கள் வளநாடுமங்கையற்கு
பேரிகையறைந்தார்கள் பெரியடங்காதான்முழங்க
மல்லரிதாளம் மத்தளத்துத்தாரி
நாகசுரபுள்ளாங்குழல் நலமுடனேதானூத
ஆலங்கள்தான்சுழட்ட அரிவையிளமங்கையற்கு
சேலைகள்தானிறைக்க சந்தனப்பொடியிறைக்க
குந்தாணிமேலே கொம்பனையை நிற்கவைத்து
பட்டுதிரைவளர்த்தி பைங்கிளியைகுந்தவைத்து
ஆலஞ்சுழட்டி அட்சதைபொட்டுமிட்டு
சாந்துதிலர்தமிட்டு சந்தனமும்மேற்பூசி
பண்டுபலாதிகள் பழவர்க்கம்ருசிவர்க்கமும்

கொச்சிமலைத்தேனும் குடகுமலைத்தேனும்
சீனிச்சருக்கரையும் சிறந்தபலாச்சுளையும்
வாழைக்கனிருசியும் மாம்பழமும்சர்க்கரையும்
மற்றபலகாரமும் வகையானயினிப்புளிப்பும்
கொச்சிதமர்த்தங் கொய்யாக்கனிமுதலாய்
வடைசுகியன்பணியாரம் அதிரசந்தோசையுடன்
அப்பளம்பணியாரம் ஆனபசுவுநெய்யுந்தான்
ஏற்றியிரக்கி இன்பமுடனுண்ணவைத்து
உண்டுபசியாறி உத்தமியாள்மங்கையரும்
கையலம்பித்தானும் களிப்புடனேவாய்துடைத்து
கற்பூரந்தாம்பூலம் கனிவாய்க்குத்தான்கொடுத்து
சந்தனமும்புட்பமும் தையலர்க்குத்தான்கொடுத்தார்
மாயவனும்மன்னவனும் மற்றதொருபெண்களெல்லாம்
எல்லோரும்பசியாறி இன்பமுடன்தான்பொசித்து
கையலம்பிஎல்லவரும் கருணையுடன்தானமர்ந்தார்
பூசிடுஞ்சந்தனமும் புனுகுசவ்வாதணிந்து
புட்பத்தினுற்செண்டு போதவேதான்முடித்து
சிங்காதனிலிருந்து தாம்பூலந்தான்தரித்து
சந்தோஷமாகிச் சகலருமந்நேரம்
சீமந்தம்முடிந்தபின்பு சிலவுவிடைவாங்கி
அவரவர்கள்மாளிகைக்கு அனைவோரும்போனார்கள்
காரிழையாள்மாது கலந்தாரிநாயகியும்
மாயனதுசீர்பாதம் வணங்கிநமஸ்கரித்து
வாழ்த்திவிடைகொடுத்து மங்கையிளமயிலே
புத்திரனைப்பெற்று புகழ்பெறவேவாழ்ந்திடுவாய்

பெருமாள் வந்துவிட்டது

வாள்விஜயன்புத்திரற்கு மனையாளாய்வந்தவளாய்
போகவிடைதாருமென்றார் பெருமாள்நடந்துவிட்டார்
துவாரகாபுரிதேடி சுவாமியும்வந்துவிட்டார்
மதுராபுரிபெண்களும் மயிலனைமார்தாதிகளும்
சிலதுநாளவ்விடத்தில் தேன்மொழிமாரெல்லவரும்
குளிகுளிக்குநாள்வரைக்குங் கோதையர்கள்தானிருந்தார்
பிள்ளைபெருமளவும் பெண்களெல்லாமங்கிருந்தார்

கலந்தாரி புத்திரனைப் பெற்றது

காரிழையாள்மாது கலந்தாரிநாயகியும்
பத்துத்தினங்களானவுடன் பாலகனைப்பெற்றெடுத்தாள்

பாலகன்றான்பெறவே பாண்டியர்கள் தன்மகட்கு
அறிக்கையிட்டார் தூதுவனால் அல்லிமலர் நாயகிக்கு
செல்வம்பிறந்ததென்று சீராகத்தொட்டில்களும்
அன்னவூஞ்சல்தொட்டில்களும் அழகுடனே தானனுப் [பி
பாட்டனார் தன்பேரை பாலனுக்குத்தான்றரித்து
அனுப்பியேவைத்தாள் அல்லிமலர்க்குழலாள்
வந்ததொருகட்டிலிலே பாலனைத்தான்வளர்த்தி
சித்திரவில்பேரனவன் சின்ன அருச்சுனனார்
என்றுதிருநாமம் இட்டாரேபாலனுக்கும்
அழகுடனேதானிருந்தான் அல்லிமகனாரும்
மதுராபுரிபெண்கள் மயிலனைமார்யாவர்களும்
அம்மா நீ அஞ்சாதே அரசர்களும்பாண்டவர்கள்
காடுறைந்தபாண்டவர்கள் நாடாளவருவார்கள்
ஐவர்வந்தபின்பு அமருவாய்தென்மதுரை
போகவிடைதாருமென்று போற்றியடிபணிய
அப்படியேசம்மதித்து அனுப்பிவிடைகொடுத்து
நடந்தார்கள்மதுரை நாயகிமார்பெண்களங்கே
தேனுமதுரையது தென்மதுரைதேடிவந்தார்
அல்லிமலர் நாயகிக்கு அடிவணங்கிதெண்டனிட்டார்
எழுந்திருமென்று ஏந்திழையாள்வாழ்த்த
போனதுவும்வந்ததுவும் புதுமையும்சொன்னார்கள்
கேட்டுமனமகிழ்ந்தாள் கிளிமொழியாளல்லியரும்
காரிழையாள்மாது கலந்தாரிநாயகியும்
புத்திரனைப்பெற்று புகழ்ச்சியாய்வாழ்ந்திருந்தாள்
மாமனதிகர்னர் வரப்போகத்தானிருந்தார்
விசாரணைசெய்து விசனங்களில்லாமல்
ஆதரித்துதானிருந்தார் அம்மான்திருகர்னர்
புலந்திரனார்தன்கதையைப் பூதலத்தில்கேட்டவர்கள்
கேட்டவர்கள்யாவர்களும் கீர்த்தியுடன்தான்வாழ்க
ஊழூழியென்றும் வுலகத்திலுள்ளவர்கள்
வாழிவாழியென்று வரமளித்தாரீஸ்வரனார்

புலந்திரன் களவுமாலை - முற்றிற்று.

---

திருமகள் விலாச அச்சகம், சென்னை :—1958.

